தஞ்சை சரசுவதி மகால் வெளியீட்டு எண் : 432

# தமிழ்ச் சுவடிகளின் விளக்கம்

இருபதாம் தொகுப்பு

(மருத்துவப் பகுதி)




தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்
சரசுவதி மகால் நூலகம்

2001

விலை : ரு. 100-00

தஞ்சை சரசுவதி மகால் வெளியீட்டு எண் : 432

# தமிழ்ச் சுவடிகளின் விளக்கம்

இருபதாம் தொகுப்பு

(மருத்துவப் பகுதி)

சிறப்புக்கேண்மைப் பதிப்பாசிரியர் :

புலவர் வீ. சொக்கலிங்கம்

தமிழாசிரியர் (ஓய்வு)

சரசுவதி மகால் நூலகம் தஞ்சாவூர்




தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

சரசுவதி மகால் நூலகம்

2001 விலை : ரூ. 100-00

# நூற்பதிப்பு விளக்கக் குறிப்பு


| | |
|---|---|
| நூற்பெயர் | : தமிழ்ச் சுவடிகளின் விளக்கம் (20-வது தொகுப்பு) |
| பதிப்பாசிரியர் | : புலவர் வீ. சொக்கலிங்கம் |
| வெளியிடுபவர் | : இயக்குநர், சரசுவதி மகால் நூலகம் |
| வெளியீட்டுஎண் | : 432 |
| மொழி | : தமிழ் |
| பதிப்பு | : முதல் பதிப்பு |
| வெளியீட்டு நாள் | : மே 2001 |
| தாள் | : 11.2 கி.கி. தமிழ்நாடு |
| நூல் அளவு | : 34×48 செ.மீ. |
| பக்கங்கள் | : 208 |
| படிகள் | : 250 |
| எழுத்து | : 10 புள்ளி |
| அச்சிட்டோர் | : ஸ்ரீ வேலன் பிரஸ்,<br>132. செ.பி. கோவில் தெரு<br>சிதம்பரம் |
| புத்தகக்கட்டு | : அட்டைக் கட்டு |
| பொருள் | : மருத்துவச் சுவடிகளின் விளக்க அட்டவணை |
| விலை | : ரூ. 100/- |




# வெளியீட்டாளர் முகவுரை

## தமிழ்ச் சுவடிகளின் விளக்கம் 20-ஆம் தொகுப்பு

(மருத்துவப் பகுதி)

தஞ்சை சரசுவதி மகால் நூலகம் பன்மொழிச் சுவடிகளின் கருவூலமாகும். இந்நூலகச் சுவடிகள் பதிப்பிக்கப்பெற்று நூல்களாக வெளியிடப்பெற்றுப் பல்லோராலும் பயன்படுத்தப்பெற்று வருகின்றன. சுவடிகளை ஆராய விரும்புவோர்க்கு வாய்ப்பாக நூலகச் சுவடிகள் குறித்த விளக்க அட்டவணைகளும் இலக்கியம், மருத்துவம் எனும் இரு பகுப்புகளில் தொடர்ந்து வெளியிடப்பட்டு வருகின்றன.

அவ்வரிசையில் 'தமிழ்ச்சுவடிகளின் விளக்க அட்டவணை - இருபதாம் தொகுதி' இப்போழுது வெளியிடப்படுகிறது. இத்தொகுதி மருத்துவச் சுவடிகளுக்கான அட்டவணைத் தொகுதியாகும்.

இத்தொகுதியை உருவாக்கி அளித்துள்ள பதிப்பாசிரியர் இந் நூலக முன்னாள் தமிழ்ப் பண்டிதர் புலவர் வீ. சொக்கலிங்கம் அவர்களாவார். அவருக்கு என் நன்றியை உரித்தாக்குகின்றேன்.

இந்நூல் வெளியீட்டுக்குத் தேவையான நிதியுதவியை நல்கியுள்ள நடுவண் அரசுக்கும் என் நன்றியினை உரித்தாக்குகின்றேன்.

இத் தொகுதி நன்முறையில் வெளிவர ஆவன செய்துள்ள நூலக நிருவாக அலுவலர் திரு. சாமி. சிவஞானம் அவர்களுக்கும், வெளியீட்டு மேலாளர் திரு. அ. பஞ்சநாதன் அவர்களுக்கும், துணைநின்ற ஏனை யோர்க்கும், நூலை அச்சிட்ட சிதம்பரம் ஸ்ரீ வேலன் அச்சகத்தாருக்கும் என் வாழ்த்துகள்!

சுவடியியல் ஆர்வலர்களுக்கும், ஆய்வாளர்களுக்கும், அறிஞர்களுக் கும் இந்நூல் நல்ல கருவி நூலாகி வரவேற்புப்பெறும் என்பதில் ஐயமில்லை.

தஞ்சாவூர்
10—12—2001

சி. கோசலராமன், இ. ஆ. ப.
மாவட்ட ஆட்சித் தலைவர்,
மற்றும்
இயக்குநர்,
சரசுவதி மகால் நூலகம்.

# பதிப்பாசிரியர் முகவுரை

"மருந்தென வேண்டாவாம் யாக்கைக்கு அருந்தியது
அற்றது போற்றி உணின்"

என்பது வள்ளுவம். இது, வருமுன் காத்தலைக் குறிக்கிறது. அப்படிக் காவாதார், நோய்வாய்ப்பட்டு, அதற்கு மருந்து தேடிப் பெற்று, குணம் பெறுவர்.

இத்தகைய மாந்தர், தம் நல்வாழ்வு குறித்து, நம் முன்னோர்கள் மானுடம் மற்றும் மாடு, குதிரை, யானை முதலான விலங்குகட்கும் நோய் நாடி, நோய் முதல் நாடி, அது தணிக்கும் மருந்து தேடி, அது நன்மை செய்யும் வகையறிந்து, தொகைப்படுத்திக் கையாண்டதோடு, எதிர் காலத்தவரும் நோயற்ற வாழ்வில் நீடு வாழ, அவற்றை ஏட்டுச் சுவடிகளாக்கித் தந்தனர்.

அவ்வாறான ஏட்டுச் சுவடிகள், தாமே மருத்துவர்கள் போல், தஞ்சை அரண்மனை தன்வந்திரி மகாலிலிருந்து செயல்பட்டுப் பின் சரசுவதி மகாலில் இடம் பெற்றுள்ளன. மதிப்பிற்குரிய நன்கொடையாளர்கள் தந்த மருத்துவச் சுவடிகளும் இடம் பெற்றுள்ளன.

அவைகளின் விவர அட்டவணைத் தொகுப்புகள் :
3, 4, 5, 8, 9, 11, 12, 13, 14, 15, 17, 18, 19 ஆகிய தொகுதிகளாக வெளிவந்துள்ளன. மற்றவை இலக்கியம். தற்போது இந்த 20-வது தொகுதி வெளிவருகின்றது.

இதில், சுவடி எண்கள் 1451-1520 வரை விளக்க அட்டவணை தயாரிக்கப்பட்டு, வெளிவருகிறது. பொருளடக்க அகர வரிசையும் இடம் பெற்றுள்ளது.

இத்தொகுதியினைப் பதிப்பிக்க அனுமதி யளித்த, தஞ்சை சரசுவதி மகால் நூலக இயக்குநர் மற்றும் மாவட்ட ஆட்சியாளர் அவர்கட்கும், நூலக நிருவாக அலுவலர் சாமி. சிவஞானம் அவர்கட்கும், பதிப்பு மேலாளர் அ. பஞ்சநாதன் அவர்கட்கும் எனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இதனைப் பதிப்பிக்கத் தேவையான நிதியுதவியளித்த நடுவணரசுக்கும், நன் முறையில் அச்சேற்றித் தந்த, சிதம்பரம், ஸ்ரீ வேலன் அச்சகத்தாருக்கும் எனது நன்றி உரித்தாகிறது

இவ்வட்டவணையினைப் பயன்படுத்தி, அந்தந்த சுவடிகள் வழி, அதில் கூறப்பட்டுள்ள மருந்து முறைகளைக் கையாண்டு, மக்கள் நல்ல பலன் பெறுவார்களாக.

இதில் காணும் குற்றம் நீக்கி குணங்கொண்டு வாசித்தல் கற்றறிந்த மாந்தர் கடன்.

இங்ஙனம்

புலவர். வீ. சொக்கலிங்கம்
சிறப்புக் கேண்மைப் பதிப்பாசிரியர்
சரசுவதி மகால்

தஞ்சாவூர்
19— 1—2001

# வைத்தியச் சுவடிகளின் அகரவரிசைப் பட்டியல்

## அ

## ஆ



## இ

## சு



## சூ



## சோ



## சௌ



## த



## தி



## தூ

## தெ



## தே



## ந



## நா



## நோ



## ப



## பா



## பி

## பு



## பெ



## போ



## ம



## மா



## மெ



## யா



## ர



## ரெ

## ரோ



## வா



## வை

## இதிலடங்கியுள்ள இலக்கியச் சுவடிகள்





# எமது வெளியீடுகள் சில...

## மருத்துவ நூல்கள்

| | ரூ. பை. |
|---|---|
| அகத்தியர் 100 | 30 — 00 |
| அகத்தியர் அட்டவணை வாகடம் | 52 — 00 |
| அக்கால சித்த வைத்திய பல முறைகள் | 20 — 00 |
| ஆனந்த கந்தம் (ரசவாத நூல்) | 100 — 00 |
| போகர் நிகண்டு அட்டவணை | 18 — 00 |
| தன்வந்திரி ஏரண்டத் தைலம் | 20 — 00 |
| சித்த மருத்துவ ஆய்வுக்கோவை | 125 — 00 |
| எண்ணெய் வாகடம் | 40 — 00 |
| கர்ப்பிணி பாலரோக சிகிட்சை | 45 — 00 |
| ஜ்வரரோக சிகிட்சை | 50 — 00 |
| மச்சமுனி நாயனார் 800 | 21 — 00 |
| நயனரோக சிகிட்சை | 70 — 00 |
| பஞ்சகாவிய நிகண்டு | 150 — 00 |
| சௌமிய சாகரம் | 70 — 00 |
| குழந்தை பராமரிப்பு | 15 — 00 |
| 4448 வியாதிகள் ஒரு விளக்கம் | 50 — 00 |
| பாண்டு காமாலை சிகிட்சை | 40 — 00 |
| பித்தரோக சிகிட்சை | 30 — 00 |
| பேதி அதிகார சிகிட்சை | 60 — 00 |
| பலதிரட்டு வைத்தியம் | 50 — 00 |
| இராமதேவர் சூத்திரம் | 75 — 00 |
| க்ஷய, உளமாந்தை சிகிட்சை | 18 — 00 |

| | |
|---|---|
| அக்கால சித்தவைத்திய அனுபவ முறைகள் | 40 — 00 |
| சுவாச காச சிகிட்சை | 25 — 00 |
| சூலை, குட்ட, மூலரோக சிகிட்சை | 80 — 00 |
| சித்த மருத்துவச் சுடர் | 200 — 00 |
| தேரர் நீர்குறி சோதனை | 10 — 00 |
| வைத்திய ரத்னாவளி | 160 — 00 |
| வைத்தியத்திரட்டு | 40 — 00 |
| வாதரோக சிகிட்சை | 60 — 00 |
| நாடி வாகடம் | 150 — 00 |

## வரலாற்று நூல்கள்

| | |
|---|---|
| தஞ்சை நாயக்கர் வரலாறு | 205 — 00 |

## நீதி நூல்கள்

| | |
|---|---|
| நீதி சதகம் | 12 — 00 |
| தருமநெறி நீதிகள் | 8 — 00 |

## சோதிட நூல்கள்

| | |
|---|---|
| வராகர் ஓரா சாத்திரம் | 150 — 00 |
| சினேந்திரமாலை | 65 — 00 |
| பூர்வ பாராசர்யம் | 150 — 00 |
| காலப்பிரகாசிகை | 80 — 00 |
| ஜாதக அலங்காரம் | 160 — 00 |

உ

தஞ்சை சரசுவதிமகால் நூலகம்

# தமிழ்ச் சுவடிகளின் விளக்கம்

## இருபதாம் தொகுப்பு

## மருத்துவப் பகுதி

★ ★ ★

வரிசை எண் 2715 சுவடி எண்: 1451-a

### வைத்திய சாரம்

ஏடுகள் : 17 கி. எண்ணிக்கை : 250 அளவு : $18\frac{1}{2} \times 3\frac{1}{2}$ செ மீ.
பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து தமிழ்

**தொடக்கம் :**

சொல்லும் வயித்திய சார
சூட்சுமநூல் முப்பத் தாறா
அல்லும் பகலும் அறிவுரை—நல்ல
குணபதியாம் பூரணத்திற் கூடியே வாழும்
கணபதியின் பாதமலர் காப்பு.

**முடிவு :**

அவனிதனிற் பண்டிதரா யறியச் சொல்வா
ரன்னமிலாப் பொறியடக்கும் பெரியோர்க்கன்றி
யெய்தாது யாவருக்கும் மியம்புங் காலே ! — 36

**காலம் :**

இல்லை

குறிப்பு :

இதில், துஷ்டர்களுக்கும் மூன்றுஞ் சொல்லக் கூடாது. அறியாமல் வைத்தியஞ் செய்பவர்கட்கு நரகம் வரும், கருதரிக்கும் விதம் முதலான பல தலைப்புகள் உள்ளன.

★ ★ ★

வரிசை எண் : 2716 சுவடி எண் : 1451-b

## ரெத்தினச் சுருக்கம்

ஏடுகள் : 103 கி. எண்ணிக்கை : 2000 அளவு : $18\frac{1}{2} \times 3\frac{1}{2}$ செ.மீ.
பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

குறிப்பு :

இது எமது சுவடி எண் 249/D439 போன்றது.

★ ★ ★

வரிசை எண் ; 2717 சுவடி எண் : 1451-c

## வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 16(104—119) கி. எண்ணிக்கை : 300 அளவு : $18\frac{1}{2} \times 3\frac{1}{2}$ செ.மீ.
பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : பலர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் ;**

### லிங்கக்கட்டு

துரிசி, வீரம், பூரம் வெண்காரம் கெந்தகம்
வகைக்கு பணவிடை—1 உமிணீர் விட்டரைத்து
லிங்க கட்டி விராகனிடை —$2\frac{1}{2}$

முடிவு :

சட்டிமேல் மூடி சிலைமண் செய்து
அடுப்பில்வைத்து எரிக்கவும்
பங்கம் ரசம் வரும்.

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், லிங்க மெழுகு, செய்யும் விபரம், ரசபற்பம். வெடியுப்புச் சுன்னம் முதலியன உள்ளன.

★ ★ ★

வரிசை எண் : 2718 சுவடி எண் ; 1451-d

## அகத்தியர் சுருக்கம் — 16

ஏடுகள் : 3½ (120—123) கி. எண்ணிக்கை : 80 அளவு : 8½ × 3½ செ மீ·
பக்கத்திற்கு : 7-8 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 254-b/D.454 போன்றது.

★ ★ ★

வரிசை எண் : 2719 சுவடி எண் : 1451-e

## வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 100 கி. எண்ணிக்கை : 2000 அளவு : 18½ × 3½ செ மீ
பக்கத்திற்கு : 8—12 வரிகள் ஆசிரியர் : பலர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

கண்டா அவிழ்தம்

தங்கமுத்தொடு வெள்ளி திப்பிலி
தருகிராம்பொடு மதுரமும்
தாவுகநகம் ளுமே சிவதவ மணிந்திடும்
மணிகளும்

முடிவு :

கைகாலெரிச்சல் வெட்டை
மேல்கண்ட ரோகம் யின்னமும்
அநேக ரோகம் தீரும்
ரெத்த விர்த்தியுண்டாகும்
பசிதீபனமாகும். பெலனுண்டாம்
கைகண்டது.

காலம் :

இல்லை

குறிப்பு :

இப்பகுதி மிகமிக சல்லடைக் கண்ணாக உள்ளது இதில் பொளவைக்கு மருந்து, வயத்துளவுக்கு லேகியம், குஷ்டத்துக்கு மருந்து, மேகவாயுவுக்கு, சின்னவல்லாதிரி, கட்டுவர்தி மாத்திரை, முதலான பல தலைப்புகள் உள்ளன.

★ ★ ★

வரிசை எண் : 2720 சுவடி எண் : 1452-a

## சோதிட ரத்னாவலி

ஏடுகள் : 8 கி. எண்ணிக்கை : 250 அளவு : 35 × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 6–8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

வெண்டாமரைக் கோவில் மேவினாள்
பொற்பாதம் ............
பொருளனைத்தும் சோராதென்னாவிடத்தே
நிற்க நவில்.

முடிவு :

புதன் - 1, வியாழன் - 2, வெள்ளி - 7, சனி - 3,
பாம்புக்குக் கதிர் - 2 என்பது
இந்தக்கதிர்கள் தந்தா மாட்சியிலித்தனையு
முச்சத்தில் ஒன்றேற்றச் பெறுவர் - 24
ஏற்றிய வரட்சியுள் ளன்னிலைபாகுவ ரிக்க

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், தரிக்கால் அறிதல் முதலான செய்திகள் கூறப்பட்டுள்ளன.

★ ★ ★

வரிசை எண் : 2721 சுவடி எண் : 1452-b

## வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 190 கி.எண்ணிக்கை : 8000 அளவு : 35 × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 6-8 வரிகள் ஆசிரியர் : பலர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை: முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் ;

### வாதநிதானம்

வெண்பாவைப் பண்பாவை வேரியயன்
நாரைமயில்
கண்பாவை போலவென் கண்பாவை
நண்பர்க்கு மாலயனுஞ் சங்கரனும் வாழ்த்தியிடப்
புண்டரிகவாலையத்தின் வாழுமனம்.

முடிவு :

### பரிவேட லட்சணம்

முரண்டா மருக்கன் பரிவேடம்
முதச்சாமத்தில் மழைவெள்ளம்
மிரண்டாஞ்சாமம் பரிவேடம்
மினியவுயிர்கள் மிகத்தழைக்குந்

திரண்டாதசிக்கும் பூமியெல்லாஞ்
சென்னீரிளகப் பெருகிநிற்கும்
பரண்டே விழுங்காண் பயிரனைத்தும்
............ நாலாஞ் சாமத்தில்

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், உத்தமாக்கினி மாத்திரம், அமுதசாகரப் பிரையோகம், கலிக்கம், தோஷா அமுர்தம் சுவாசகாசத்துக்கு, வாதசிர கிஷாயம் உதரசூலைக்கு, வாயூரலுக்கு முதலான பல அரிய, தலைப்புகள் உள்ளன.



வரிசை எண் : 2722 சுவடி எண் : 1453.

## தன்வந்திரி பகவான் வாகடம், நாடிக்குறிப்பு குணபாடம்

ஏடுகள் : 250 கி. எண்ணிக்கை : 7500 அளவு : 27×2½ செ.மீ.
பக்கத்திற்கு : 4-8 வரிகள் ஆசிரியர் : தன்வந்திரி பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

குறிப்பு :

படித்தறிவது கடினம் சல்லடைக் கண்ணாக உள்ளது.



வரிசை எண் : 2723 சுவடி எண் : 1454-அ

## தன்வந்திரி சிந்தாமணி — 1100

ஏடுகள் : 189 கி. எண்ணிக்கை : 5000 அளவு : 27×3 செ.மீ.
பக்கத்திற்கு : 7-8 வரிகள் ஆசிரியர் : தன்வந்திரி பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

திரைகட லுலகி லுள்ள
ஜெனங்களுக் கிடரில் லாமல்
உரைமறைப் புகலு மீசன்
உமைதனக் குபதே சித்த
விரைதமிழ் வடனூ லுள்ள
விருத்தியும் பலனுந் தோய்ந்து
வரைகவி யதனாற் செய்த
வாகடம் விளம்பு வோமே ! — 1

முடிவு :

சகாயா சுவாசத்துக்கு

மிளகு சுக்கு திப்பிலியும்
மேவுங் கீழிக்காய் நெல்லியுடன்
பழகுஞ் சீரிய தேக்குடனே
பகருங் கண்டங் காலியிவை
அழகுபிறவே யினயோ ரொன்று
ஆன களஞ்சி தான்கொண்டு
யிளகுந் தண்ணீ ரிருநாழி
யிட்டே காச்சிக் கொள்வீரே ! 1061

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், 12 மாதங்களில் மூன்று நாடி பார்க்க, வாத நாடிகுணம், பிரமிய வாதத்துக்கு யெண்ணெய், கெண்டைக்கால் வாதகுணம், நீராமை குணம், கண்ணுக்கு மாத்திரை, நவரெத்தின சூரணம், நடுக்குவாத சன்னி குணம், குஷ்டம் கரப்பானுக்கு எண்ணெய், நீரழிவின் குணம், பசுவின் வெண்ணை குணம், மந்தாகிளி வாயு குணம் கெந்தகம் பவுத்திரம், யோனி பவுத்திரம் முதலான சிறந்த தலைப்புகள் உள்ளன;



வரிசை எண் : 2724 சுவடி எண் : 1454-b

## அகத்தியர் வைத்திய சிந்தாமணி — 543

ஏடுகள் : 114 (190—303) கி. எண்ணிக்கை : 3000 அளவு : 27 × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 8–9 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

திருவாக்குஞ் செய்கருமம் ......தம்கை

விருத்தம்

திருத்திய கையில் மேவும்
சிவனுமைக் குரைத்த யின்னூல்
கருத்தமிழ் உளம கிழ்ந்து
கனிந்தடி வணங்கி யேத்தி
அருந்தமி ழால்ப டுத்தி
அவனியி லருளிச் செய்த
மருந்தினைத் திரட்டிச் சிந்தா
மணியென விளம்ப லுற்றார் — 1

**முடிவு :**

திரியென்ன பூவரசும் வெள்ளறுக்கின் வேருந்
திரமான மலைதாங்கி கஸ்தூரி மஞ்சள்
ளுரியென்ன சிறுநாகப் வெடியுப்புப் புழுகு
முத்தமனே புகையிலைச்சார் விட்டு ஆட்டி
திரியென்ன சிலையிலே பிரட்டிக் கொண்டு
திரமா யணல்க்கொளுத்தி னாசிக் கேத்து
பரியென்ன பீனிசமும் புழுவுங் கூட
பாலகனே தீர்ந்துவிடும் கபாலங் கேளே ! — 341

**காலம் :**

இல்லை

குறிப்பு :

இதில், இரத சுத்தி, கெவுரிவெள்ளைப் பாஷாண சுத்தி, அயம், லிங்கம், தாம்புர பற்பம், நவலோக செந்தூரம், பூபதி மாத்திரை, திரிலோக சிந்தாமணி, வாதராச்சிதன், கோடாசூவி மாத்திரை, கண்ணுக்குப் பச்சைத் தாம்புராதி உருண்டை, நஞ்சுதின்னத் துக்கு மாத்து முதலான பல தலைப்புகள் உள்ளன.

* * *

வரிசை எண் : 2725 சுவடி எண் : 1455

## வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 180 கி. எண்ணிக்கை : 3500 அளவு : 14×3½ செ மீ.
பக்கத்திற்கு : 10—12 வரிகள் ஆசிரியர் : பலர் பொருள் : வைத்தியம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரிஓம் தன்றாக குருவாழ்க குருவே துணை

காணப்பா சேதியொன்று சொல்லக் கேளு
கங்கையொரு பாத்திரத்தில் விட்டுக் கொண்டு
பூணப்பா மங்கென்ற (கவசம்) கூட்டி
(பற்களாகக்) கடிகைரெண்டு பூணப் பாரு
தோணப்பா மண்டலத்தில் மூகங்கா ணாது
சுகமாக பதினாறு மாதம் பார்த்தால்
பேணப்பா சலமெல்லாம் சாய்கை யில்லை
பிலத்துதடா காயத்தை யொளிபா யாதே ! — 1

முடிவு :

கழஞ்சிரண்டு வெடுத்துமைபோல் பணவிடையந் தேனில்
கருப்புட்டி சக்கரையா வெண்ணெய் பொரிமாவில்
சலந்திரண்டு வோடிவிடும் மறைப்பாகச் சூலை
சாருமே குட்டமுடன் சார்ந்த மேகம்
வளைச்சவில்போல் கூன்முடக்கு வயித்துவலி குன்மம்
வாதமென்ன விஷநீரால் தடிப்புற்று விரியும்
விளைஞ்சுவந்த நோய்தீர்க்கும் விரிவுமெத்த வுண்டு
விளையணுகும் வைத்தியர்க்கு விதித்ததிந்த நூலே ! — 6

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில் லிங்கக் கட்டு, கருவங்கச் சுன்னம், மேகத்துக்கு மருந்து, பரங்கி செந்தூரம், ரசசெந்தூரம், வண்டுகடி, அறக்கடி, மேகக்கடி யிதுகளுக்கு போடப் பட்டசுடல் தயிலம், வேதைக்கு லிங்கமெழுகு, பேய்க் கொம்மட்டிக்காய் குழம்பு, தேவ முனி அருள்ச் செய்த ஆறாதார சரக்கு திராவகம், மேக எண்ணெய் முதலான பல தலைப்புகள் உள்ளன.

* ★ *

வரிசை எண் : 2726 சுவடி எண் : 1456-a

## பால வாகடம்

ஏடுகள் : 29 கி. எண்ணிக்கை : 1000 அளவு : 30 × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 7-8 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

அருள்பெருகு மாதி சத்தி
அம்மையா ளடியை வாழ்த்தி
கருவினில மைந்து தித்த
கண்டவர் தன்னூல் நாடி
வரும்பிணி சங்கை நாடி
சாந்திமருந் தெண்ணை குருநோய்மூலி
தெரிந்தநூற் றன்பது தீதுவாம்
செப்பினோம் வாவி நூலே !

காப்பு

அகஸ்த்தியர் பாதம் காப்பு

முடிவு :

யெத்திர மணிமுறை குருவருளும்
யிசைந்த சத்தியந் தெய்வ பக்தி

சுந்திர முகமலர் சாந்த குணம்
    தனதாரமே பிரதாரம் மிந்தன
வந்திடு மவர்க்கு மிக்க
    வருனோய் தீரும் மருந்துசித்தி
நந்தி யுரையால் தன்மந்திரி
    நவின்ற பாலவாகட நூல் முற்றே ! — 151

பாலவாகடம் எழுதி முடிந்து முற்றும்

காலம் :

ருத்ரோத்காரி வருஷம் தை மாதம் 7-ந் தேதியில் எழுதி முடிந்தது
குருசாமி, துணையாக வேணும்,
ஷெடி குருசாமியே கெதி.
ஹரி ஓம்.

குறிப்பு :

இதில், எண்ணெய் புகட்டும் விதம், நல்ல எண்ணெய் பக்குவம், தோஷவிபரம் தோஷத்துக்கும் கிரகத்துக்கும் புகை, முலைப்பால் குறி, குழந்தைக்குறோகம் சுத்து, பத்திக்கி ஆதாரம் முதலியன உள்ளன, முன் ஏட்டுப்பகுதி மிக மிகச் சிதைந்து ஒடியும் நிலையில் உள்ளது.

★ ★ ★ ★

வரிசை எண் : 2727 சுவடி எண் : 1456 b

## தன்வந்திரி சாத்திரம்

ஏடுகள் : 28 (30—57) கி. எண்ணிக்கை : 1000 அளவு : 30×3 செ.மீ
பக்கத்திற்கு : 7 8 வரிகள் ஆசிரியர் : தன்வந்திரி பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

நாடிபரீச்சை

கண்ணொடு பேச்சு தானும்
    காரியமா மெட்டுவகைப் பரிச்சை

தண்ணீ லாத்தினேன் அவையிலும்
அளகுணங்க ளெல்லாம் அசாத்திய

முடிவு

சிக்கான பதினஞ்சு சூலை தன்னில்
சிரப்பான குணாகுணத்தின் செயலைச் சொன்னேன்
அக்கான அசஉத்தியமாம் சூலை யாறு
ஆகாத குணங்கண்ட முதிர சூலை
உக்கான உதாரசூலை சேற்றுமம்
உறுதிகுணம் சூலையொடு ஆம சூலை
நிக்கான நிம்ப சூலை........... — 140

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், வாதபித்த சிலேட்டுமம் இருக்குமிடம், தெளிவாய் நாடி பார்க்குங்காலம், நாடி தெரியாத பெயர்கள், வாத சுரகுணம், பித்த சுரகுணம், தோஷசுரம், காசசுரம், அஷ்ட குன்மம் வாயுவு குணம், வாத குணம், அமசூலை, உதாரசூலை, குன்மசூலை, பக்கசூலை, கெற்பசூலை, தூரசீலை முதலியன உள்ளன.



வரிசை எண் : 27.8 சுவடி எண் :1456-c

## இராமதேவர் சூத்திரம் — 10

ஏடுகள் : 4 (59 – 62) கி. எண்ணிக்கை : 150 அளவு : 30 × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 6-7 வரிகள் ஆசிரியர் : இராமதேவர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

காணப்பா யேரியிலே விளைந்த பிண்டம்
கடிதான மாங்கிஷத்தோ டெடுத்து வந்து
பூணப்பா பொரிக்காரம் பொரித்துக் கொண்டு
பிண்டத்தை வாய்பிளந்து அதனுள் போட்டு

முடிவு :

நாடெல்லாந் திரிந்தாலு மிந்தப் போக்கு
நல்லமுறை யிதுபோலே யெங்கு மில்லை
பாடல்போல் சொன்னதென்று மெண்ண வேண்டாம்
பத்துமே சூத்திரமாம் பாடல் முற்றே !

காலம் :

குரோதன வருஷம், கார்த்திகை மாதம் 9-ந் தேதி விசுவனாத பூவாற்றாவு சேவடி முற்றும்

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 698P/D 1387 'இராமதேவர் வகார சூத்திரம் பத்து' போன்றது.

இதன் பின்னர் பூ நீர் குரு எழுதிய (63, 64) இரண்டு ஏடுகள் உள்ளன:

★ ★ ★

வரிசை எண் : 2729 சுவடி எண் : 1456-d

## பிரம்மமுனி சூத்திரம் — 385

ஏடுகள் : 89 (65—153) கி. எண்ணிக்கை : 3000 அளவு : 30×3 செ மீ.
பக்கத்திற்கு : 7-8 வரிகள் ஆசிரியர் : பிரம்ம முனியார் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

சீரரு ளான சோதி
சிவமய ஞான மூர்த்தி
யாரணி கொன்றை சூடி
யாரணிந் தானைப் போற்றி

முடிவு :

வாறான அஞ்சனமுந் திலதஞ் சொன்னேன்
வசியமொடு அளப்புவித்தை மாரணமுஞ் சொன்னேன்

ஆறான சூரணமொடு வாசி யோகம்
அடங்கிநின்ற கருகக்கிடைசூத் திரந்தான் முற்றே ! - 385

பிரம்மமுனி சாஷ்த்திரம் யெழுதி முடிஞ்சது முத்தும்
தேவி சகாயம் செய்யவும்

சுகளம் :

பிரபவா வருஷம் கார்த்திகை மாதம் 15-ந் தேதியில் யெழுதியது. பாலதெண்டாயுத பாணி கிறுபையாம்.

இந்த சுவடி பரமேசுவர போவார் ராவு மகன் விசுவநாத பூவார்ராவு சுவடி.

குறிப்பு :

இது எபது சுவடி எண் 322-e/D 616 'பிரம்மமுனி வைத்திய சூத்திரம்' போன்றது. அதில் 383 பாடல்களே உள்ளன.

இதன் பின்னர் மருத்துவம் எழுதிய எடுகள் (154.155)2 உள்ளன.



வரிசை எண் : 2730 சுவடி எண் : 1456-e

## கருவூரார் பாடல் — 32

ஏடுகள் : 7 (156–162) கி. எண்ணிக்கை : 250 அளவு : 30×3 செ.மீ.
பக்கத்திற்கு : 7-8 வரிகள் ஆசிரியர் : கருவூரார் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஒரைக்கிறேன் மரைப்புதனை சவஸ்திர மாக
வுலகத்தோர் பிழைப்பதற்கு கருவைச் சொல்வேன்
திறக்குரேன் சிவஞானந் தங்கிற் றானால்
சித்திமுத்தி ரெண்டும் பாரு பாரு

முடிவு :

சாகுமே கார சத்தி
சதாசிவ நாமம் கேட்டால்

போகுமே பாவ மெல்லாம்
போக்குடனே செய்து பாரே! — 32

முற்றும்

கருவூரார் முப்பத்திரெண்டும்

முற்றிற்று

வாலை பரமேஸ்வரி ரெட்சிக்கவும்

**காலம்:**

யிபா வருஷம் பங்குனி மாதம் 11-ந் தேதி.

**குறிப்பு :**

இது. எமது சுவடி எண் 434-d/D 93) 'கருவூரார் சூத்திரம்' போன்றது.



வரிசை எண் : 2731 சுவடி எண் : 1456 f

## தூத லட்சணம்

ஏடுகள் : 5 (163—167) கி. எண்ணிக்கை : 200 அளவு : 30×3 செ.மீ.
பக்கத்திற்கு : 7-8 வரிகள் ஆசிரியர் : ஆறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

வந்தபிணி தீர வயித்தியன் முன்னேசென்று
சிந்தையுடன் கூறுமொழி செப்புவேன் - விந்தையுடன்
தூதனுரை சொல்லுவது தொகையுரை லெக்கணமும்
பூதலத்தில் சொல்வேன் புரிந்து.

**முடிவு :**

நன்றெனக் கிவன்பா தத்தை
நலமுடன் தொழுது போற்றி

யுண்டெனக் குருவைத் தானு
　　முகந்துநீ தொழுது போற்றிக்
கொண்டுவந்தே யவந்தன்னை
　　விரையுடன் வணங்கிக்
கொண்டு யின்று நீபோ நீராகி
　　விதமுடன் கருமம் நன்றாம். — 23

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், வைத்தியனை யழைக்க வந்தவர்களைக் கொண்டு வயித்திய நிலை யுரைத்தல் கூறப்பட்டுளது.

* * *

வரிசை எண் : 2732　　　　சுவடி எண்: 1456-

## அகத்தியர் வெடியுப்புச் செயநீர்—16

ஏடுகள் 4(168-171)　கி. எண்ணிக்கை : 200　அளவு : 30×3 செ.மீ
பக்கத்திற்கு : 7 – 9 வரிகள்　ஆசிரியர் : அகத்தியர்　பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது　முழுமை : முற்றுமுளது　எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

முத்தான வெடியுப்புச் செயநீர் கேளு
　　மூதண்ட புளியெட்டு வெடியுப்பு பத்து
பத்தான சாரமென்று சீன மொன்று
　　பாங்கான அமுரியுப்பு பலந்தன் போட்டு
கொத்தாக யிதுவெல்லாம் யிடித்து நன்றாய்
　　கொளித்திடவே வெந்துமது சுன்ன மாகும்
மத்தான சுன்னமதை பனியில் வைக்க
　　அப்பனே செயநீராம் அறிந்து கொள்ளே ! — 1

முடிவு :

வேதையிதைச் சொல்லவென்றால் வொவ்வொன்றைத் தொட்டு
　　பெழுகோடும் செந்தூரம் களங்கம் கோடி

பாதையிதில் செயநீரோ சுன்ன மாக்கொடி
பரக்கிரதோர் குளிகை முதல் சித்து கோடி
போதையிதை விரித்தாட யுகம் கொள் ளாது
போக்கதிலே சொல்லவென்றால் துறையோ கோடி
காத்தையது வுப்பைவிட்டு கடந்து மேலே
கற்பூர மார்க்கத்தைக் காட்டி னேனே ! — 16

செயநீர் — 16 முற்றிற்று

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், சாரசெயநீர், குருசெயநீர், கற்பூர செயநீர், கல்லுப்புச் செயநீர், செய்முறை கூறப்பட்டுளது.



வரிசை எண் : 2733 சுவடி எண் 1456-பு

## அகத்தியர் 205-க்குச் சுருக்கம் — 21

ஏடுகள் : 3 (172—174) கி. எண்ணிக்கை : 200 அளவு : 30×3 செ.மீ.
பக்கத்திற்கு : 7–9 வரிகள் ஆசிரியர் ; அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை ; முற்றுமுளது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

கேளப்பா வைலோகம் மார ணந்தான்
கெடியான வயித்தியமாம் யிரனூற் றஞ்சு
தேளப்பா கொட்டுதல்போல் நின்றக் கால்தான்
திரம்சொல்வேன் யிரும்புக்குத் தாரம் கெந்தி.

**முடிவு :**

மஞ்சலுட னிருவகையு வகைக்கிப் பலமாக
அரைத்துக் கூட்டிப் பத்திரமாகக்
காச்சிக் கொள்ளு
நாளப்பா பஷ்ப முதல் தயிலத் துக்கு

பொலிவாக யிக்கரூவும் யிருவத் தொன்றில்
சொன்னேன் பாரே ! — 21

முற்றிற்று - முஷ்த்தும்

காலம் ;

இல்லை

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 317-h/D 590 போன்றது. ஆயினும் பாடல்களில் வேறு பாடுகள் காணப்படுகின்றன,



வரிசை எண் : 2734 சுவடி எண் : 1456-i

## அகத்தியர் பாடல் — 1

ஏடு : ½ (175) கி. எண்ணிக்கை : 10 அளவு : 30×3 செ.மீ.
பக்கத்திற்கு : 4 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஆதிமுத லானனக்கி நிறுவாணி பாதம்
அனவரத கலியாணி சமைந்த நாீதம்
சோதிரசம தாற்சீலை கார சாரம்
துலங்கவே சீனமது சாதி லிங்கம்

முடிவு :

நீதியுடன் எழுசரக்கை யிதனிற் போட்டு
நீராவியில் வைத்தல்லோ கல்வத் தாட்டி
போதியுள்ள வில்லை செய்து புடத்தில் போடு
புதுமையாய் செந்தூரம் செப்பில் முற்றே ! ... 1

காலம் :

இல்லை

குறிப்பு :

இதி ', செந்தூரம் செய்முறை கூறப்பட்டுளது

★ ★ ★

வரிசை எண் : 2735 சுவடி எண் : 1456 j

## அகத்தியர் பாடல் — 2

ஏடு : ½ (175) கி. எண்ணிக்கை : 20 அளவு : 30×3 செ மீ.
பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

மாதருட ருதுவான போது மல்ல
  மைந்தனே அவளோடே சேர்ந்து வாங்கி
போகமுடன் உன்விந்து அவள்நா தந்தான்
  பூரணமாய் பீங்கானில் ரெண்டும் வாங்கி
சூதமுடன் லிங்கமதுஞ் சீலையுங் காரம்
  சுத்தமுள்ள தாரமுடன் பூரம் கெந்தி
நீதமுடன் பொரிக்காரம் லவணஞ் சாரம்
  நினவோடே பதினொன்று சரக்கைப் போடே ... 1

முடிவு :

போட்டபின்பு ரவியில்வைத்து கல்வத் தாட்டி
  பூரணியைத் தியானித்து வில்லை தட்டி
நாட்டமுட னிதையெடுத்து ஓட்டில் வைத்து
  நலமாக மேலோடு கொண்டு மூடி
ஆட்டமுடன் சீலைசெய்து புடத்தைப் போடு
  அப்பனே ரசபஷ்ப மாகும் பாரு
தீட்டமுடன் செம்புவெள்ளி ரெண்டில் தாக்கு
  சிவசிவா பத்தரைத்தான் மாத்து மாமே ! — 2

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், ரசபற்பம் செய்யும் முறை கூறப்பட்டுள்ளது.

வரிசை எண் : 2736 சுவடி எண் : 1456-k

## அகத்தியர் பாடல் — 3

ஏடு : 1 (175—176) கி. எண்ணிக்கை : 30 அளவு : 30×3 செ.மீ.
பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

**தொடக்கம்**

எட்டுரெண்டு மானபத்து அகார உகாரமாகி
எண்ணியே ஆண்பெண்ணு மான வாறும்
கட்டுடனே சாதியவள் றூபம் பார்த்து
கன்னியவள் வாலையடா காமப் பாலை
தட்டுடனே அங்கொன்று ரவியில் வாங்கி
தனித்ததொரு ஓங்கென்று மதியில் விட்டு
பட்டுடனே இப்படிநீ கலவி செய்து
பராபரைக்கி சுண்ணமது கொடுத்து வாங்கே ! — 1

**முடிவு :**

பத்தான மாத்தெடுத்து தகடு தட்டி
பற்பமது திரிகோண சலத்தில் பூசி
அத்தான புடம்போட பற்ப மாகும்
அதிகமுள்ள பற்பத்தைத் தின்று பாறு
சித்தான தேகமது பத்தரைய தாகும்
சிவன்சொன்ன செந்தூரம் வழலை கூட்டி
புத்தியருள் வாலையடா திரேகம் திரேகம்
புதுமையிது வாகுமப்பா மூன்றில் முற்றே ! — 3

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில் சில பற்பம் செய்யும் முறையும், அதன்பலனும் கூறப்பட்டுள்ளது.



வரிசை எண் : 2737 சுவடி எண் ; 1456-1

# அகத்தியர் பாடல் — 4

ஏடு : 1 (176) கி. எண்ணிக்கை : 50 அளவு : 30×3 செ மீ.
பக்கத்திற்கு : 8-9 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

பதியான றவிபத்து மாலை மாவு
மனசான பதிஆறில் வுலரிக் கொண்டு
பதியாக அதையெடுத்து சரக்கில் சேரு
பாண்டமுடன் நடுதமுறு யிட்டு நன்றாய்
சதியான குழிதயில மிறக்கிக் கொண்டு
சச்சிதா னந்தமொரு மேருவில் விட்டு
சுதியான யித்தயிலம் சரக்குக் கெல்லாம்
சூரியனில் காட்டவொரு சுன்ன மாமே ! — 1

**முடிவு :**

பற்பமடா சுரோணிதந்தான் ஆதி னாதம்
பகலொளியே காணுமடா றாவில் அப்பா
தற்பணஞ்செய் காயயிஷ்த்திரி செபமும் பண்ணு
சதாகோடு காலமட்டும் (வே)தை யாகும்
அற்பமென் றிருந்தாக்கா லாகா தப்பா
அரனாணை மாலாணை சொன்னேன் சொன்னேன்
கற்பமுண்டால் உன்தேகம் சொர்ண மாகும்
கற்பூர தீபஒளி நாலிலே முற்றே ! — 4

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், சுன்னம், பற்பம் செய்முறை, அதன் பலன்கள் கூறப்பட்டுள்ளன.



வரிசை எண் : 1738 சுவடி எண் : 1456-ஈ.

## அகத்தியர் பாடல் — 5

ஏடுகள் : 1½ (177—178) கி. எண்ணிக்கை : 100 அளவு : 30 × 3 செ மீ
பக்கத்திற்கு : 8-9 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

அந்தமிகும் வண்மையாம்பதத்தைப் போற்றி செய்து
சிந்தைமிகு ஞானவளி செப்பக் கேள்
பைந்தமிழால் வாரணனைப் போற்றி யென்பில் வைத்து
அஞ்சுக்குள் பூரணமாம் நந்தி பாதம் போற்றி ! ... 1

முடிவு :

தேறினால் யோகமது ஞானம் சொல்வேன்
சிற்பரையி னருளாலே தெரிய வேணும்
கொள்ளையிட்டு ஞானத்தைக் கொள்ள வேணும்
யேறினால் வாசியின்மே லேற வேணும்
என்னாளும் பூரணத்தி லிருக்க வேணும்
மாறினா லிடகலையை மாற வேணும்
மவுனமென்ற அட்சரத்தை மகிழ்ந்தி டாதே
மகிழ்ந்திட்ட ஞானமது மாய ரூபம்
மதியமென்றும் புருவமென்றும் மதிதா னென்றும்
மதியென்ற கூரேது பராப ரத்திற்சேரும்
படிகநிற மாகினால் ஞான ரூபம்
மகிழ்ந்திட்ட ஞானமென்னும் ஓசை யாலே
நாதாந்த வேதாந்தம் ரெண்டுஞ் சொல்லும்
கலிந்திட்ட படியெல்லா மெல்லா ருக்கும் சொன்னேன்
கடுஞான ஆனந்த மைந்தில் முற்றே ! — 5

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், ஞானமார்க்கமும் அதன் பயனும் கூறப்பட்டுளது. செய்யுட்கள் சரியில்லை.

★ ★ ★ ★

வரிசை எண் : 2739 சுவடி எண் : 145 -n

# அகத்தியர் பாடல் — 6

ஏடு : 1 (173 — 179) கி. எண்ணிக்கை : 100 அளவு : 30 × 3 செ மீ.
பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

## தொடக்கம்

ஆமப்பா வாதமுறை சொல்லக் கேளு
அரனெனக் குபதேசித்தார் அகாரத் தாலே
தாமப்பா அரிதார கட்டைக் கேளு
தனித்திருந்த மஞ்சலுட கருவால் நீதான்
நாமப்பா கொடிக்கள்ளி சாறும் விட்டு
உத்தமனே மத்தித்து தாறம் போட்டு
நாமப்பா சொல்லிவிட்டோம் அரிதார கட்டை
நாலுபுடம் முழப்புடத்தில் நாறல் போமே! — 1

## முடிவு :

சாய்க்கவே நாகமது வெள்ளி போலே
தானரைத்த மருந்ததனை நாகத் தப்பி
மேய்க்கவே புடம்போட நாகங் கட்டும்
மேவியதோர் கெந்தியுடன் வீரஞ் சேர்த்தே
மாய்க்கவே மனோசிலையும் லிங்கம் கூட்டி
மாளஅரை யெலும்பிச்சம் பழச்சார் விட்டு
சாய்க்கவே செம்பினிட வேதை யாகும்
சிவம்சொல்ல முடியாது காணும் காணே! — 6

## காலம் :

இல்லை

## குறிப்பு :

இதில், அரிதாரக்கட்டு, நாகக்கட்டு முதலான செய்முறைகளும் பலனும் கூறப் பட்டுள்ளன.

★★ ★

வரிசை எண் : 2740

சுவடி எண் : 1456-ஒ

## அகத்தியர் பாடல் — 7

ஏடுகள் : 2 (179—180) கி. எண்ணிக்கை : 100 அளவு : 30×3 செ.மீ.
பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் ; மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

எட்டான பொருளதுவே அகார மாகும்
யெண்ணிரண்டாம் பொருளதுவே உகார மாகும்
கட்டான பொருளதுவே மகார மாகும்
மைந்தனே யிம்மூன்று அம்உம்மம் மென்றோது
திட்டானஐயுங் கிலியுஞ் சவனங் கூட்டி
சேத்துநீ செபியடா வாலை தீட்சை
பொட்டான பொட்டதுவே போட்டாப் போலே
பொறிகளு ள தெல்லா மடங்கும் பாரே ! — 1

**முடிவு :**

திறமான குமரிகற்ப மிதுதா னப்பா
சிங்குவங்குரல் முந்திரியால் காணி யாச்சு
வறமான அரைக்கால்தான் யோனி யாச்சு
வாதாடும் வாதமுறை வளலை யப்பா
பறபான விந்துவடா நாதம் ரெண்டும்
பாடினேன் யேள்தனிலே பண்பாய் முற்றே !

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், 6 பாடல்களே உள்ளன. கடைசிப் பாட்டு 3 வரிகளைக் கொண்டுளது.

இதில், வாலைதீட்சை, குமரிகற்பம் முதலானதுகள் கூறப்பட்டுள்ளன.



வரிசை எண் : 2741 சுவடி எண் : 1456 p

# அகத்தியர் பாடல் – 8

ஏடுகள் : 2 (180—182) கி. எண்ணிக்கை : 110 அளவு : 30×3 செ மீ.
பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் ;**

சிவயவசி உங்கென்று திரும்பவே ஹரிக்லி
யும்ங்கென்றுது சரிதையொடு கிரிகையது
ஞானமார்க்கந் தப்பாது உங்கிலியும் சவ்வென்றோது
பரிசமொடும் பூரகத்தி லியங்கும் வாய்வு
பார்க்கயிலே ஓம்சிவய வசியென் றோது
துரியமடா துரியத்தில் அப்பு உப்பு
சூடினேன் பாரையுப்பைச் சொல்லுகு ரேனே ! — 1

**முடிவு ;**

குறியான அகாரமே மகார மாகுந்
குற்றமில்லா முதலெழுத்தே யிதினுள்ளாச்சு
அழியாத பொருளாகி யிதினுள் ளாச்சு
அற்றனுயிர் யிதிற்பிறப்பு யிதினுள் ளாச்சு
வளியாக யிம்மூன்று சேந்தோர் சித்தன்
வளியறியா மோடரென்ற லகத்துதை மாடு
ஒளியாகுஞ் சோதிமணி யிதுவே யாகும்
முயர்வைத்த நாகமணி கிரீடந் தானே ! — 8

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், பஞ்சாட்சரம், பீஜாட்சரங்களோடு கூடிய மருத்துவம் கூறப்பட்டுள்ளது.



வரிசை எண் : 2742 சுவடி எண் : 1456-q

## அகத்தியர் பாடல் — 9

ஏடுகள் : ½ (182) கி. எண்ணிக்கை : 10 அளவு : 30×3 செ.மீ.
பக்கத்திற்கு : 3 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

> ............ .............. .. ......... ......... :
> ............ .. ......மின்னம் வகையைக் சேரு
> அணங்கியே யிதையெடுத்து செந்திரித்தா
> லனுப்பான முன்போலே குடுத்தா யானால்
> மணங்கியே போகாது ஒன்ப துக்கும்
> பேசாத சாபவறும் ஆணை யிட்டோம்
> மிணங்கியே பணவிடைதான் கொண்டா யாகில்
> யேனென்ற பேர்களுந்தான் யேங்கி னாரே ! — 1

முடிவு :

இல்லை

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், ஒரு செய்யுளே உள்ளது மற்ற பாடல்கள் இல்லை.

★ ★ ★ ★

வரிசை எண் : 2743 சுவடி எண் : 1456-r

## அகத்தியர் பாடல் — 10

ஏடுகள் : 2 (182—184) கி. எண்ணிக்கை : 130 அளவு : 30×3 செ.மீ.
பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

பாரப்பா வாதியென்றால் பூசை வேணும்
    பதிவான சிபம்வேணும் தியானம் வேணும்
நேரப்பா வாசியென்ற யோகம் வேணும்
    நேராக சோடசத்தை நிறுத்த வேணும்
காரப்பா குருபதத்தை காற்க வேணும்
    கைகண்ட தொழில் முறைகள் அறிய வேணும்
சாரப்பா சாஸ்திரமும் சூஷ்த்தி ரந்தான்
    பாத்தறிந்து வாதமுறை பாரு பாரே ! — 1

முடிவு :

போமடா கரியோட்டி லூதும் போது
    போக்காகக் கண்விட்டு ஆடும் ஆடும்
நாமடா கல்லுப்பைக் கூட்டி யூது
    நல்லதொரு வயிரமணி போலே யாகும்
நாமடா ஆணுவத்தால் வெளியில் போட்டேன்
    நாடாதே கள்ளரென்ற மானி டர்க்கு
தாமடா யிதுவெல்லா மறிந்து கொண்டு
    தாரணியில் விள்ளாதே பத்தில் முற்றே ! — 10

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், மருத்துவன் இலக்கணமும், கடைப்பிடிக்க வேண்டிய விதி முறைகளும் கூறப்பட்டுள்ளன.



வரிசை எண் : 2744 சுவடி எண் : 1456-S

## அகத்தியர் சூத்திரம் — 11

ஏடுகள் : 2 (184—186) கி. எண்ணிக்கை : 150 அளவு : 30×3 செ மீ.
பக்கத்திற்கு : 8–9 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஆதிமுத லானகரு பிண்டங் காப்பு
ஆனந்த வல்லிகொடி யான காப்பு
சோதியிறு நிருவாணிபறை நாதங் காப்பு
சுந்தரியாள் பூரணச்சி விலெவள் காப்பு
நீதியிலே அண்டபிண்டங் கடந்த காப்பு
நனிவான வாசியினால் ஆடும் காப்பு
பாதிமதி யானசிவன் பாதங் காப்பு
பரமனார் கணபதியோ டாறுங் காப்பே' — 1

முடிவு :

தேவரா யிருந்துவந்த சடத்தி னுள்ளே
சதாசிவமாம் விந்துவந்து ரசம தாச்சு
மூவரா யிருந்துவந்த நாத சத்தி
மும்மூர்த்தி யாலறிந்து யிருவ ரானார்
ஆவரா யிருந்துமனம் ஒன்றே யாகி
அன்பதியே யிருந்துவந்த பிண்டந்தா னப்பா
பாவராய் முன்தயிலம் வெள்ளி செப்பி
லீயத்தி லிரும்புமுத லீய பத்தே! 11

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், மருத்துவம் தத்துவருபமாகவும் மறைமுகமாகவும் கூறப்படுகிறது.



வரிசை எண் : 745 சுவடி எண் : 1456–t

## அகத்தியர் சூத்திரம் — 16

ஏடுகள் : 4 (186-189) கி. எண்ணிக்கை : 200 அளவு : 30×3 செ.மீ
பக்கத்திற்கு : 8-9 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம்

ஆதியென்ற மூலகண பதியின் பாதம்
　　ஆடியதோற் சூத்திரம் பதினா றப்பா
தேடியே யண்டபிண்ட மெல்லாம் சேர்த்து
　　திறமாகப் பாடினதோ ரின்னூ லப்பா
யாடியே நந்தீசர் சொன்ன வாக்கியம்
　　நன்றான மூலகண பதியே காப்பு ! — 1
(இப்பாடலில் மூன்று வரிகளே உள்ளன)

முடிவு :

காணுநீ நூத்திலேதான் மெய்ய தாகும்
　　கருவதுதான் அன்பதிலே மெய்ய தாகும்
பூணேதா னிந்தநூல் துறைகாண பிக்கும்
　　பூட்டியதோர் பூட்டெல்லா மஞ்சில் காணும்
தோணவே கருக்குருவு வழிதுறையுங் காணும்
　　சுகமாகும் வேதைவெளி யோடே யேறும்
பேணவே பதினாறு யிதுவே யாகும்
　　பிலமான அகஸ்த்தியர்சொல் வாக்கிய முற்றே ! — 16

காலம் :

இல்லை

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 267-b/D. 478 போன்றது.

இதனைத் தொடர்ந்து, விந்து தம்பனம், தாதுபுஷ்டி லேகியம் எழுதப்பட்டுள்ளது.

★ ★ ★

வரிசை எண் : 2746　　　　சுவடி எண் : 1456-u

## அகத்தியர் மூப்பு — 50

ஏடுகள் : 3(190–192)　கி.எண்ணிக்கை : 200　அளவு : 30×3 செ.மீ
பக்கத்திற்கு : 10 - 11 வரிகள்　ஆசிரியர் : அகத்தியர்　பொருள் : மருத்துவ
நிலைமை : பழுது　முழுமை : முற்றற்றது　எழுத்து : தமிழ்,

தொடக்கம் :

மயமான முப்பூவின் மார்க்கந் தன்னை
வயித்தியத்துக் காதியாம் விரித்துச் சொல்வேன்
செயமான கணபதியுங் கந்தன் தானுஞ்
சிவனோடு உமைபார்வதி நிறுவாணியும்

முடிவு :

பாரப்பா யிதிலொரு சிவிதம் பச்சிலைந்தை
தித்திப்போடும் ஒருநூறு அன்ப துக்குள்
வைத்ததொரு லோகமா ரணந்தான் முப்பு வாலே

சிறப்பா குருவை யிட்டு செந்தூ ரித்தாலு
சிவக்காது யிடையில்லை செயமா காது
யுறப்பா யிக்கருவை யொளிக்க வில்லை
யொருகோடி நூல்களிலே யொளித்தார் சித்தரே ! — 18

(வரிவிடுபட்டுளது)

காலம் :

இல்லை

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 449-e/D 988 போன்றது.

★ ★ ★

வரிசை எண் : 2747

சுவடி எண் : 1456-v

## அகத்தியர் ஏக மூலி சூத்திரம் 100

ஏடுகள் ; 20 கி.எண்ணிக்கை : 800 அளவு : 30 × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 8-9 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் ;

பூரணமாஞ் சுழினைநடுக் கமல மீதே
புகழ்பெரிய மூலகண பதியே காப்பு
காரணமா யெனையாண்ட பரனே போற்றி
கட்டாக வாதத்தில் லெட்சங் காப்பு.

முடிவு :

மனம்வேறு சாதகமாய் சாஷ்த்திரத்தைப் பார்த்து
மனம்பிலக்கும் குருவிநிடம் வணங்கி நின்றால்
மனவேறு வாராது சித்தி முத்தி
வாய்க்குமே சூத்திரந்தான் நூறு முற்றே.
அகஷ்த்திய மகாமுனி அருளிச் செய்த
யேக மூலி நூறு முற்றிற்று.

காலம் :

இல்லை

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 466-d/D 1036. போன்றது

இதன் பின், பீமரச பற்பம் எழுதப்பட்டுளது.



வரிசை எண் : 2748 சுவடி எண் : 1456-w

## அகத்தியர் — 1200 க்கு சுருக்கம் — 100

ஏடுகள் : 24 (213-236) கி எண்ணிக்கை : 800 அளவு : 30×3 செ.மீ.
பக்கத்திற்கு : 8-9 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

குறிப்பு :

இது, முன் பிரதி போன்றது.



வரிசை எண் : 2749 சுவடி எண் : 1456-x

## அகத்தியர் குழம்பு

ஏடுகள் : 7 (237-243) கி.எண்ணிக்கை : 250 அளவு : 30×3 செ.மீ.
பக்கத்திற்கு : 6—7 ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

பொதிகை நாதனார் பாடிய

அகஷ்தியர் குழம்பு

பறுவ ந் தன்னில் வாழும்
பரமனா ரருளி னாலே
பெருமையாய் உலகில் வாழும்
புண்ணிய ஜனங்க ளுக்காய்
ஒருபல வியாதி வந்தால்
உண்மையாய்த் தீரு மென்று
பிரபல முனிவர் தானும்
பேசியே மருந்து கேளே ! — 1

முடிவு :

மெய்யாய்ச் சொன்னோ மிளைப்புயிளை
மிகுந்த யிருமல் தனைத்தீர்க்க
நய்யச் செய்வாய் கொப்பரைதான்
நன்றாய்க் கீத்தில் பணவிடைதான்
முய்யக் கொளம்பில் தான்சேத்து
முடிகி மூன்று நாள்கொடுக்க
செய்யத் தீரு மென்றுமுனி
செப்பு மொழிகள் தப்பாதே ! — 26

காலம் :

இல்லை

குறிப்பு :

இது எமது சுவடி எண் 159-b/D 253, 593/D 1211, 594/D 1212 போன்றது. ஆயினும் இது முழுமையும் உளது.

இதன் பின்னர் கண்பூவுக்கு மாத்திரை எழுதப்பட்டுளது. 'அமுர்த நிலைகள் நிற்கு மிடம் 244-ம் ஏடுவரை எழுதப்பட்டுளது

★ ★ ★

வரிசை எண் : 2750 சுவடி எண் : 1456-/

# யாகோபு வைத்தியம் முதலியன

ஏடுகள் : 32 (2+5 27) கி. எண்ணிக்கை : 1000 அளவு : 30×3 செ மீ.
பக்கத்திற்கு 7-8 வரிகள் ஆசிரியர் ; யாகோபு பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

அண்ட வாதத்துக்குப் புகை

புங்கவிரை கழற்பருப்பு யிச்சம் கொட்டை
பொடிசெய்து புளிமரத்தின் புறாணி சுடடு
அங்கிதனை சட்டியிலே யிட்டுக் கொஞ்சம்
அதிலிடுமுன் சூரணத்தை புகைவீச.

**முடிவு :**

கொத்தமல்லி கூவிளமும் குறுந்த மயி
நெற்பொறியும்
ஒத்தசுக்கு முத்தமொடு உரைத்த நீரில்
வைத்து கண்ட
சக்கரையும் உரைத்து நீரில் குடிப்பீராய்
பித்தம் நாற்பது போய்விடுமே

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், நரம்பைப் பத்தின வாய்வுகளுக்கு ரசபற்பம் தலைமுழுக குளிர்ச்சித் தயிலம், சாம்பிராணித்தயிலம், வழுக்கை யெண்ணெய், வெகுநாள் வெட்டை மருந்து, அமரபட்சம் அமுர்தநிலை அறியும் காலம், பிளவைக் குணம், பித்தத்துக்கு குடிநீர் முதலியன உள்ளன.



* * *

வரிசை எண் : 2751 சுவடி எண் : 1156-z

## சூதமுனி நாடி — 30

ஏடுகள் : 6 (278-283) கி. எண்ணிக்கை : 300 அளவு : 30×3 செ.மீ.
பக்கத்திற்கு : 7-8 வரிகள் ஆசிரியர் : சூதமுனி பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

வாதமது முன்னெழுந்து தாழ்ந்து சற்றே
மயிலதுபோல் நடைநடந்து மந்த மாகில்
சேதமது வருசுமென்ப தாறா மாண்டில்
செப்பலா மரணமென தீர்க்க மாக
நாதமது குறைந்துவிட்டில் போலே கண்டால்
நாளெட்டில் மரணமென நவில லாகும்
பேதமது யில்லையப்பா பிசகி டாது
பெரியவனாடி சூதமுனி பேசுங் காலே! — 1

முடிவு :

தாதென்ற நாடிநிலை யறிய வேணுஞ்
சதாகாலஞ் சாஷ்திரத்தை னோக்க வேணும்
ஊதென்ற தத்துவங்கள் சரீரக் கூறும்
உற்றுணர்ந்த பஞ்சபா தகங்கள் நீக்கி
தேடுகின்ற மனோன்மணியாள் பாதந் தன்னை
தினந்தோறும் மறக்காமல் சேவித் தேத்தி
னாடுநென்ற ஆணுவங்கள் மாய்கை யற்று
நல்லபரி காரஞ்செய நாடி முற்றே ! — 30

சூதமுனி நாடி முற்றும்

ஸ்ரீ பாலதெண்டாயுத குருவே துணையாக வேண்டியது.

காலம்:

இல்லை

குறிப்பு .

இதில் சாத்தியம் அசாத்தியம் முதலான நாடி பற்றியசெய்திகள் பலவும் பேசப் பட்டுள்ளன.



வரிசை எண் 2752 சுவடி எண்; 1456 aa

# வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 31 (284–314) கி. எண்ணிக்கை : 1500 அளவு : 30×3 செ.மீ.
பக்கத்திற்கு : 7 - 10 வரிகள் ஆசிரியர் : பலர் பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

அயமெழுகு

அறப்பொடிக் கொண்டுவந்து புளிப்பு
மாதளம் பழச்சாத்தில் போட்டு வெய்யலில்
வைக்க, அறப்பொடி உலந்த பிறகு
காய வைத்து எடுத்துக் கொண்டு
அந்தப் பொடித்தூள் பலம் — 1

முடிவு :

பத்தியம் வெள்ளாட்டுப் பாலும் அன்னமும்
சீனிச்சர்க்கரை தொட்டு சாப்பிடவும்
நாலாநாள் உப்பு கூட்டவும்
அஞ்சாநாள் புளி கூட்டவும்
ஸ்நானம் பண்ணிப் போடவும்
சறுவாங்க வீக்கம் வாடிப் போகும்
கை கண்டது.

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், மேகத்துக்குக் கொல்லன் கோவை யெண்ணெய், பஞ்சசூத செந்தூரம், குஷ்டம் பதினெட்டுக்கும் மருந்து, குழந்தைகளுக்கு மாந்த சன்னிக்கு உள்ளுக்கும் மேலும் போட எண்ணெய், கஸ்தூரி மெழுகு, சுரத்துக்கு கெவுரி மாத்திரை, பரங்கிப் பட்டை ரசாயனம், பஞ்சலோக செந்தூரம், பாண்டரசகற்பூர வைப்பு, சுக்குக்களி மூல ரோகத்துக்கு, தலைவலி, பீனிசம் மய்க்கத்துக்கு திரி முதலியன உள்ளன.



வரிசை எண் : 2753 சுவடி எண்: 1457

# வைத்திய நூல்

ஏடுகள் 36 (30-66) கி. எண்ணிக்கை : 1000 அளவு : 28 × 3½ செ மீ
பக்கத்திற்கு : 7 – 8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

சாறாகுந் தண்ணீரா மிவற்றுக் கெல்லாம்
தாக்கவே வாதசுரஞ் சன்னி வாதம்
வீறாகு மயவாதம் சி......... தோஷ
மென்றுதின்னும் பிரலாபந் தனக்குத் தானும்
மாறாத காண்டீபங் கெம்பீர பூதம்
...........க்கும் பிரலாப சன்னி போகும்
ஆறாகுங் கிராணிமுதல் நீரிழிவுக் கெல்லாம்
ஆனதே வயிரவத்தை யறையக் கேளே ! — 200

முடிவு :

வைத்ததொரு கியாழ முண்ணில் மூலம் போகும்
மைந்தனே யின்னமொரு வரிசை சொல்வோம்
வைத்திடுவாய் கியாழமுரு மதுரங் கெந்தம்
யகத்தான நிலவேம்பு சிறுகாஞ் சோரிமேல்
வைத்தங்க யெட்டொன்றாயக் குறுக்கி யுண்ண
வாள்மூல முள்மூலம் வாதை தீரும்
வைத்திடவே வெட்பாலை யரிசி பகட்டை
மைந்தனே கெருடபச்சை சம்பா சந்துக்கே — 303

காலம் :

இல்லை

குறிப்பு :

இது, ஒரு மருத்துவ நூலின் நடுப்பகுதி. நூற்பெயர் அறியக்கூடவில்லை. முன் 29 ஏடுகள் இல்லாததால் தலைப்பு அறியக்கூடவில்லை.

இதில், திரிபலாதி நெய், அமிர்த சஞ்சீவி நெய், சீந்திநெய், நாயுருவி நெய், பேய்ப்புடல் நெய், பஞ்சகோல குக்கில் நெய், திப்பிலி நெய், காரீய செந்தூரம் முதலான பல தலைப்புகள் உள்ளன.

★ ★ ★

வரிசை எண் : 2754 சுவடி எண் : 1458

# வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 46 கி. எண்ணிக்கை : 1000 அளவு : 25×2½ செ மீ.
பக்கத்திற்கு : 6-7 வரிகள் ஆசிரியர் : பலர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

வெள்ளைக் கலையுடுத்தி ..........தாயே
நொச்சிச்சாறு படி — 1
முருங்கைச்சாறு படி — 1
சிறுகுறுஞ்சான்சாறு படி — 1
இஞ்சிசாறு படி — 1
சிமரளுச்சாறு படி — 1

**முடிவு :**

சுத்திபண்ணி எட்டி ........
பிளிந்து விதையைத் கல்லில் போட்டு......
கவ...... சிறுநீரால் கரைத்து அடுப்பில்
.........மாய் காசசி எடுத்துக்
கொண்டு கலு..................

**காலம்:**

திருச்சினாப்பள்ளி சில்லா முசிரி தாலுக்கா சேர்ந்த மிட்டா காட்டுப் புத்தூர் இருக்கும் பரியாரி நரச பண்டிதன் குமாரன் மாசிமலை குமாரன் சுந்தரம் எழுதினது. எடுத்தவன் குடுக்கவும்.

விளவா வருஷம் ஆனிமாதம் மாசிமலை மகன்
சுந்தரம் கைப்பிடி எழுதினது

**குறிப்பு :**

இதில், தலைப்புகள் எலிகடித்துள்ளதால் அறியக்கூடவில்லை.

★ ★ ★

வரிசை எண் : 2755 சுவடி எண் : 1459

## மணிமந்திர ஔஷதங்கள்

ஏடுகள் : 83 கி. எண்ணிக்கை : 1000 அளவு : 1/3×3 செ.மீ.
பக்கத்திற்கு : 5-6 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

சிதம்பரத்து பிள்ளை படித்து ஏடு நன்றாக குருஷ்து
இதையாருந் திருடக் கூடாது
சிவத்து மாலையப்பெருமாள் சாமி துணை.

கரப்பனுக்கு

ஓதிய வாயுள் வேத மொழுங் குறை
தவறா வண்ண மஸ்தியா
ருரைத்தா ரிந்தஸத நூல் படியே யானுந்
தீதில்லா மணிமந்திர ஔஷத்த திரங்கள்
சொல்ல வாதியைப் போத்தி செய்தே
யருந்தமிழ் காப்பு — 1

**முடிவு :**

சீரலை சாதிக்காய் அதிமதுரம் சாதிபேதி
மாயக்காய்க் கருஞ்சிரலை தென்னங்
குரபைை மாதளம் பிஞ்சு தந்து வளம் பழம்
மலிஸா நற்சீரகம் அசம தாகம் இவை
யெல்லா மிடித்து நெய்யில் போட்டுப்
பதத்தில் வடித்து

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில் தலைப்பு இல்லை, பாட்டின்படி தலைப்பு தரப்பட்டது.

இதில், இருமலுக்கு, சர்வ புண்ணுக்கு, வாய்வுக்கு, கிரந்தி குட்டம், ஏலாதி உருண்டை, ரசகட்டுக்கு, ரசப்முரிக்க, பித்த வாய்வுக்கு, பெண்கள் வெட்டைக்கு, இதர சூலைக்கு முதலான பல தலைப்புகள் உள்ளன.

வரிசை எண் : 2756 சுவடி எண் : 14.0-a

## ஆயுர்வேத வைத்தியம்

ஏடுகள் : 23 கி.எண்ணிக்கை : 400 அளவு : 15 × 3½ செ.மீ.
பக்கத்திற்கு : 8-9 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் ;**

ஹரி ஓம் நன்றாக

மணிதங்கும் வரையுள் ளாதி
மன்னுயிர் படைத்த போதே
பிணிதங்கும வகையும் நோயும்
பேருடன் குணமுங் காட்டி
அணிதங்கு மருந்துங் காட்டி
ஆயுறு வேத மென்ன
கணிதங்கு வகையால் வேதங்
கடந்தமா முனிவர் சொன்னா

குருவே துணை

**முடிவு :**

முருக்கிலையும் உப்பு மரைத்து
தண்டில் பூசிப் புணர நல்ல சுகம்

வேறு

சதாவேரிக் கிழங்கை வெள்ளாட்டு
மூத்திரத்தி லரைத்துத் தண்டில் பூசி
புணர பூரிக்கும்,

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், கல்லு விழ, மலட்டுப் புழுவிழ, பிறவடை, இளிசக்கண்ணுக்கு, வாழாத பெண்ணுக்கு, சரீரத்தில் வெள்ளை, பிள்ளை வயத்தில் யிருந்து செத்துப் போனால்

மருந்து, மருந்தீட்டுக்கு பிள்ளைப்பிறவிக்கு, முலைப்பால் சுரக்க, வயத்தில் செத்த பிள்ளை விழ தாம்பிரபற்பம் முதலான பல தலைப்புகள் உள்ளன.

இடையிடையே ஏடுகள் இல்லை.



வரிசை எண் : 2757 சுவடி எண் :1:60-b

## வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 14 கி. எண்ணிக்கை : 200 அளவு : 15 × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 6-8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

**பீற்ற சூலைக் குணம்**

நாடிய பீற்ற சூலை
நடத்திய முறையைக் கேளு
விட்டிய அண்ணம் முன் ணருசி
தாப்பி வாந்தி யாகும்
மாட்டிய கைகள் காதும்
வதையுந்தான் மேலும் நோகும்
நீட்டிய வங்கங் கேதா
னின்றெளந் தூறுங் காணே !

முடிவு :

சூரியபிடம் வையறு ஒரு துட்டளவு
மூனரைநாள் ஏழு பொழுது குடுக்கவும்
இதுக்குப் பத்தியம் உப்புப் புளிப்புகையிலை
தவிர்க்கவும்

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், இருமலுக்கு கிஷாயம், மஞ்சதோபின் குணம், வாந்தியும் சந்தியும் நிறுத்த மருந்து, அரணைகடிக்கு மருந்து, சிலந்தி, நிப்பாக தலைபிடிக்கு திரிபுசை, சோகை பாண்டு விக்கலுக்கு லோகசெந்தூரம் முதலான மருந்துகள் சொல்லப்பட்டுள்ளன.

பகுதிகள் முன்னும் பின்னுமாக சுவடியில் இடம் பெற்றுள்ளன.



வரிசை எண் : 2758 சுவடி எண் : 1461

## கருவூரார் சூத்திரம்

ஏடுகள் : 92 கி. எண்ணிக்கை : 1500 அளவு : 21 × 2½ செ.மீ.
பக்கத்திற்கு : 6 வரிகள் ஆசிரியர் : கருவூரார் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது (செல்லரித்த நிலை) முழுமை : முற்றற்றது
எழுத்து : தமிழ்

தொடக்கம் :

சீர்பெருகும் வேதாந்த சூத்தி ரத்தை
தெட்சணா மூர்த்திபதம் பணிந்து போற்றி
கார்பெருகு ஆயினிட பாதம் போற்றி
கயிலாசத் திருமூலர் பாதம் போற்றி
ஏர்பெருகும் கோரக்கர் பாதம் போற்றி
எனையாளும் போகரிட பாதம் போற்றி
பார்பெருகும் ஏழுலட்சம் சூத்திரத்தைத் தானே
பாடினேன் காயகற்பம் ஐங்கரனே காப்பு ! — 1

முடிவு :

காணாதே யீளை...... டிருமல் காசம்
கலங்காதே சேத்துமநோய் தொண்ணூற் றாறும்
......மே மேகமெல்லாம் நாடா தோடும்
நலமான வுஷ்ணநோ யெல்(லாம் தீரு)ம்
ஆணுமே யீளையிரைப் பற்றுப் போகும்
அப்பனே வாய்......ற தெல்லாந் தீரும்
கோணுமே குண்டலமாம் வாய்...
குறிப்பாக வின்னமொரு சேதி கேளே! — 218

காலம் :

இல்லை

குறிப்பு :

இதன் தலைப்பேடு இல்லாததால் நூற்பெயர் அறியக்கூடவில்லல. இதன் காப்புச் செய்யுள் கொண்டு கருவூரா ரருளிச் செய்தது என உத்தேசிக்கப்படடது. இதன் முன்னர் 2 மருத்துவஏடுகள் உள்ளன. பின்னர் 4 மருத்துவ ஏடுகள் உள்ளன.

இதில் அமுர்த சஞ்சீவி லேகியம், அஞ்சனம், சாதிலிங்க மெழுகு முதலான பல தலைப்புகள் உள்ளன. இதன் முற்றும் இல்லாததால் (செய்யுள்) சூத்திரத் தொகை அறிய இயல வில்லை.

★ ★ ★

வரிசை எண் : 2759 சுவடி எண் : 1462-a

## சுப்பிரமணிய சுவாமி சுத்த ஞானம்

ஏடுகள் : 48 கி. எண்ணிக்கை : 600 அளவு : 16×3½ செ.மீ.
பக்கத்திற்கு : 6—8 வரிகள் ஆசிரியர் : சுப்பிரமணியர் பொருள் : ஞானநூல்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ரசிதமாஞ் சுத்தக் கியான
ரககியப் பொருளில் தோன்றுஞ்
சுகிதமா வாயு பஞ்ச
சுழல்கின்ற வட்ட மொன்றில்
உசிதமாம் தேயு மப்பு
உலாவிய சிந்தை தன்னில்
தொகிதமாஞ் சித்த மாகில்
துலங்கிய காப்புத் தானே !

தெட்சணாமூர்த்தி பாதார விந்தமே துணை.

முடிவு.

அரியெழுத்தின் விபரமதை யறிய மாட்டார்
அவனிதனி லென்னூல்க்குச் சரிநூ லில்லை
பறையென்ற வாசியினால் ஈராறுங் கடந்து
பரமதிலே கடந்தவர்க்குப் பயனும் விள்ளும்

வெளிகொண்ட மோடற்குத் தெரியா தப்பா
விரைந்தோடிக் கடினாய்போல் வேகஞ் செய்வான்
குறியென்ற ஞானமிது நூத்தொண்ணி னுள்ளே
குருச்சொன்ன விபரமெல்லாம் கூறி னேனே ! — 101

சுத்தக்கியானம்

காலம் :

இல்லை

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 435-d / D 940 போன்றது.

★ ★ ★

வரிசை எண் : 2760 சுவடி எண் 1462-b

## சுப்பிரமணிய சுவாமி சுத்த சைதன்னியம் 2-வது

ஏடுகள் : 29 கி. எண்ணிக்கை : 1000 அளவு : 16 × 3½ செ.மீ
பக்கத்திற்கு : 7-9 வரிகள் ஆசிரியர் : சுப்பிரமணியர் பொருள் : ஞானம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

சந்திர ஞான விந்துவுமர்
வியது தான் கலந்து
மந்திர மான பிரணவ
மாகி மவுனமதாய்
இந்திர வானவர்க் கெட்டா
முதரும் பொருளின்பம் தாந்
தந்திர மான ஞான
சைதன்னியங் காப்பிதுவே

முடிவு :

சொன்னதொரு வாமத்தின் பூசை சொன்னேன்
சொல்ப்பெரிய வாசியுட நேர்மை சொன்னேன்
முன்னோர்கள் சக்கரத்தின் பூசை சொன்னேன்
முந்தினதோர் கல்பத்தின் விபரஞ் சொன்னேன்

வன்னமென்ற அய்ம்பூத கலையைச் சொன்னேன்
வாகாக .........நிற்கும் அட்சரமுஞ் சொன்னேன்
பொன்னென்ற கயி(லாச) விபரஞ் சொன்னேன்
பொறுமையுள்ள வைகுண்ட ......... .........

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், தசதீட்சை முதலான ஞான மார்க்கம் கூறப்பட்டுள்ளது. இந்நூலில் என்னென்ன செய்தி கூறினார் என்பதனைக் கடைசி இரண்டு பாடல்களில் கூறியுள்ளார்



வரிசை எண் : 2761 சுவடி எண் : 1463

## வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 50 கி. எண்ணிக்கை : 1000 அளவு : 35×3 செ.மீ
பக்கத்திற்கு : 5-8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்
நிலைமை : பயனற்ற நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

**குறிப்பு :**

மிக மிகப் பழுது பட்டுள்ளது



வரிசை எண் : 2762 சுவடி எண் : 1464

## அகத்தியர் வைத்தியம் — 300

ஏடுகள் : 80 கி. எண்ணிக்கை : 1500 அளவு : $29\frac{1}{2} \times 2\frac{1}{2}$ செ.மீ.
பக்கத்திற்கு : 5—6 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : பயனற்ற நிலை முழுமை : முற்றற்றது எழுத்து ; தமிழ்.

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 235-a, 251-b, 433-e / D 931 போன்றது. மிகவும் பயனற்ற நிலையில் உள்ளது.

இதன் பின்னர் உதிரி ஏடுகள் 'வாத நிதானம்'முதலியன 14 ஏடுகள் உள்ளன.

★ ★ ★

வரிசை எண் : 2763 சுவடி எண் ; 1465

## வைத்தியத் திரட்டு

ஏடு : 75 கி. எண்ணிக்கை : 1500 அளவு : 22×2½ செ.மீ.
பக்கத்திற்கு : 6-8 வரிகள் ஆசிரியர் : பலர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

வச்சிர வல்லிக் குழம்பு

இந்துப்பு சவட்டுப்பு
வளையலுப்பு கரியுப்பு
அட்டுப்பு சுக்கு
கல்லுப்பு மிளகு
ஒட்டுப்பு திப்பிலி

முடிவு :

மூணுநாள் காலமே நேரத்துக்கு
படி1/8 கொள்ளவும். ஆறுனாள்
பத்தியம் பிடிக்கவும். கயிப்பு
புளிப்பு தவிறவும். மேகக் கெறந்தி
ஊறல் வெட்டை யினந் தீறவும்.

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், சவுபாக்கிய சுண்டி, அமுர்த [சர்க்கரை சூரணம், சுகவிரோசனம், சுரம் சுவாசகாசம், யிருமலுக்கு, அமுக்குராச் சூரணம் முதலான பல மருந்துகள் உள்ளன.

உதிரி ஏடுகளாக உள்ளன.



வரிசை எண் : 2764

சுவடி எண் : 1466

## வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை : 200 அளவு : 31 × 4 செ.மீ
பக்கத்திற்கு : 10-11 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

மேக மெனப்பட்டதுக் கெல்லாம்
நாக பற்பம் வைக்கிறதுக்கு வகை
குளச்சிப்பி அன்பது கொண்டுவந்து
சுட்டு நீறு செய்து அதிலே ஒரு
பல நவச்சாரம் போட்டு

முடிவு :

முசல் புழுக்கை ஒருபடி கொண்டு வந்து
சுக்கு ஒருபலம் வாங்கிவந்து முட்டை
நாலுவிரல் கொண்டது கொண்டு வந்து
உலத்தி வச்சிர காயமாய் பொடி பண்ணி
விறுகடிப் பிரமரணம் தேனில் குடுக்கவும்
இதுக்குப் பத்தியம் உப்பு புளி தவிரவும்
இது கை கண்டது

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், நேர்வாளம் சுத்திபண்ணுகிறதுக்கு முதலான சில மருந்துகள் கூறப்பட்டுள்ளன.



வரிசை எண் : 2765 சுவடி எண் : 1467

## தேவியாருடம் சத்தியாருடம்

ஏடுகள் : 70 கி. எண்ணிக்கை : 1000 அளவு : 23½ × 2½ செ. மீ.
பக்கத்திற்கு : 4 - 7 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

**தொடக்கம்**

பாதிமதியணி வேணியனார் கஞ்ச பாதம்
போற்றியே யுலகில் பருவ மாக
ஆதிபரா பரையுமை மாதங்கி சத்தி
யாருட நீதிநெறி யறிவைக் கேளு

**முடிவு :**

ஞானமுடன் கண்ணிலிட உமிநீ ராலே
தாகமது னாலெயிரு நாட்டி னாலும்
வானமதி லேயெழுந் தாவியைக் கண்ட
ஆடையெனும் பணியென்ன வாங்கும் பாரே !

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில் 2 சுவடி ஏடுகள் கலந்துள்ளன. ஏடுகள் தலைதடு மாற்றமாகவும் உள்ளன.

★ ★ ★

வரிசை எண் : 2766 சுவடி எண் : 1468

## அகத்தியர் — 205 பற்பமுறை

ஏடுகள் : 120 கி. எண்ணிக்கை : 1600 அளவு : 20 × 3 செ மீ
பக்கத்திற்கு : 6 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம்

ஹரி ஓம் நன்றாக குருவாழ்க

ஆனை முகவனை மேனி பவடனை
மோனமொடு தொழ
ஊன மகலுமே தெட்சணாமூர்த்தி துணை

நூல்

பூரணமா மும்மூலப் பொறியிற் சூடாம்
புகையெழும்பி மேகமதாய் சிரசிற்சூடாம்
கராணமா நீர்கலந்து கண்ணில் ரோகம்
கனலெழும்பி வாயுவினால் சூலை ரோகம்

முடிவு :

.........போட்டு ஆறாத புண்ணுக்கு புகைபிடிக்கவும்
.........மிளகு, திப்பிலி
தெசாபுரம், நெல்பொரி
சமன் பொடி பண்ணி
தேன்விட்டுச் சாப்பிடவும்

நிற்கும்

காலம் :

இல்லை

குறிப்பு :

இதன், தொடக்கத்தில், நட்சத்திர விகற்பம் உள்ளது. பிறகு பெண்கள் ரத்தப் பெரும்பாடு, சூதகக்கட்டு, பதார்த்த சிந்தாமணி, அகத்தியர் முன்னூறு, தன்வந்திரி பாடல், அகத்தியர் பாடல், பாடல் வாதரோக குணம், கஸ்தூரிப்பட்டை எண்ணெய், ரத்தமூலக் குணம் தனியனாள், செம்பொத்துச் சூரணம், சட்டைநாதர் பாடல் முதலியன கலந்துள்ளன.



வரிசை எண் : 2767 சுவடி எண் ; 1469-a

## வைத்தியக் கும்மி

ஏடுகள் : 19 கி. எண்ணிக்கை : 200 அளவு : 16×3 செ மீ
பக்கத்திற்கு : 5-7 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம
நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

கும்மியடி பெண்கள் கும்மியடி
குருபாதங் காவே கும்மியடி
நம்மை யாளும் விநாயகன் பாதத்தை
நாடிக் கும்மியடியுங்கடி - மட
மானே கும்மியடிங்கடி
தேனே கும்மியடியுங்கடி - இந்த
தேசங்கள் சேக்கவே கும்மியடி

**முடிவு :**

காடியொன்று-கிழிதனை சுருக்காய் காச்சி
வெலப்புரட எலந்ததெப்பு புரட
அலல்பட்டை அரசுபட்டை மாம்பட்டை
அத்திப்பட்டை நவல்பட்டை
அம்பு படப்பை - 4 - காசு கட்டி
நலனெ - யெறுச்சு வச்சுக்...

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில் முற்பகுதி கும்மி சந்தத்திலும், புற்பகுதி உரை நடையிலும் உள்ளது.

இதில் வீரமா கியாழம், வெள்ளைப் பாஷாணக் கட்டு, பாஷாணம், சூதக்கட்டு முதலியன கூறப்பட்டுள்ளன.

வரிசை எண் : 2768 சுவடி எண் : 1469-b

## சிறுத்தொண்டர் கும்மி

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை : 20 அளவு : 16 × 3 செ மீ.
பக்கத்திற்கு : 4 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் ; இலக்கியம்
நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

செண்பக மல்லிகைப் பூச்சொரியுந் - திருச்
செங்காட்டங் குடி தன்னில் வளர்
அன்புள்ள பக்தன் சிறுத்தொண்டன் மீதினி
லானந்தக் கும்மி தமிழ்ப் பாட

**முடிவு ;**

வாறாடுங் கொங்கை மின்னாள்
திருநங்கை மணாளன் செய்யுந்
தரும மாக்கதையைத்
தாராளமாய்க் கும்மிப் பாட்டுரைக்க
வெண்டா மரையான்பதங் காப்பாமே
சிறுத் தொண்டன் றா..............

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இது, காப்புச் செய்யுளோ. முழுமையாகக் கொண்டில்லை.



வரிசை எண் : 2769 சுவடி எண் : 1470-a

## வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 25 கி எண்ணிக்கை : 300 அளவு : $19\frac{1}{2} \times 4$ செ மீ.
பக்கத்திற்கு : 6-7 வரிகள் ஆசிரியர் : பலர் பொருள் ; மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

**தாளக பஷ்பம்**

பூநீர் கொண்டுவந்து செறுநீர் விட்டு
பெசரி தாலத்தை உள்ள வயித்து
யெரித்து யெடுத்து வேப்பம் பாசி யெடுத்து
அரைத்து கோப்பை செய்து தாலகத்தை
உள் வைத்து சிலைமண் யேழு செய்து
பொடம் மூணு யெருவில் வைக்கவும்

**முடிவு :**

வெடியுப்பு கொஞ்ச கொஞ்சமாய்ப் போட்டு
சீமை காட்டாபணச்கு குச்சியால் கடையவும்
அதையெடுத்து சிறு செருப்படி சார்விட்டு
அரைத்துப் பொடப்போட செந்தூரமாகும்
இன்னம் இதோடே ரஜமும் சேர்த்துக்கடையலாம்

சகல ரோகங்களையும் தீர்க்கும்,

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், தாளக செந்தூரம், ரெத்த வெட்டைக்கு, லிங்கக்கட்டு, யேல்வியாதிக்கு, உப்புச் சுண்ணம், வெறை வாதத்துக்கு பஞ்சலோகக் களிம்பு முதலியன உள்ளன.



வரிசைஎண் : 2770 சுவடி எண் : 1470-b

## பஞ்சாங்கம்

ஏடுகள் : 18 கி. எண்ணிக்கை : 400 அளவு : $19\frac{1}{2} \times 4$ செ.மீ.
பக்கத்திற்கு : 8-9 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : நாட்குறிப்பு
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் ;

கெறகப்பம்

| | |
|---|---|
| 9 — 1 | 27 — 3 |
| 17 — 1 | 23 - 1 |
| 19 — 3 | 35 — 3 |
| 21 — 5 | 39 — 7 |

முடிவு :

இரோநிஷம் - காந்த தோஷம்
சனிகுரு போகு தோஷம்
மந்தற் றாகுஷ்த்தா தோஷம்
சகுல அறதி தோஷம் - யாதி
மத்தி அத்த காலே

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில் ஆதாயம், யோனி, நட்சத்திரம், திதி, வார அமுஷம், சாதி ராசி முதலியன உள்ளன.



வரிசை எண் : 2771 சுவடி எண் : 1470-c

## மூர்த்தி லட்சணம்

ஏடுகள் : 1-4 கி. எண்ணிக்கை : 1500 அளவு : $19\frac{1}{2} \times 4$ செ.மீ, பக்கத்திற்கு : 5-6 வரிகள் ஆசிரியர் ; அறியக்கூடவில்லை பொருள் : சில்பம் நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

(பக்)த கணபதி ஆயுதம் — 3

வலது பக்கம்

பால கணபதி ஆயுதம் — 1

வலதுபக்கம் கரும்பு வாழைப்பழம்
இடதுபக்கம் பலாப்பழம் மாம்பழம்

தருண கணபதி ஆயுதம் — 2

வலதுபக்கம் அங்குசம் மாம்பழம் தாமரைப்பூ
இடதுபக்கம் பாசம் அதிரசம் லடடு

முடிவு :

இந்த பஞ்சவிம்சதி விக்கிரகங்களில்
அஷ்டாஷ்ட விக்கிரகங்களில் சொல்லப்படாத
மூர்த்தி-விக்கின பிரசாத மூர்த்தி யாகையால்
அவைமாத்திரம் ரூபம் சொல்லப்படுகிறது
மற்று (24) விக்கிரகங்களும் அஷ்ட்டாஷ்ட
விக்கிரகங்களில் விக்கின பிரசாத மூர்த்தி

காலம் :

(ஹரித்து)வாரமங்கலம் வரகோயில் ஸ்வாமி ரத்தை ராஜாளியாரவர்கள் கரத்தட்டாங்குடி சங்கர நாயக்கரிடம் கிரையத்துக்கு வாங்கினது.

குறிப்பு :

இதில், கணபதிலட்சணம், முருகன் லட்சணம், லிங்க லட்சணம், ஆலயத்தில் சுவாமி வைக்கிற பதம், ஸ்கந்த மூர்த்தி முதலான பல செய்திகள், கோயில்கள், மூர்த்திகள், பற்றி கூட்டப்பட்டுள்ளன.

★ ★ ★

வரிசை எண் : 2772 சுவடி எண் : 1471

## வைத்தியம் பல திரட்டு அட்டவணை

ஏடுகள் : 170 கி. எண்ணிக்கை : 1500 அளவு : 20×3½ செ மீ
பக்கத்திற்கு : 3—8 வரிகள் ஆசிரியர் : பலர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம்

வாக்குண்டாம் ........... தமக்கு — 1
செந்திருவைச் சேரலாம்.........கால் — 2

## கணபதி சக்கரம்

ஓங்காரவட்டம் போட்டு அதில் நடுவே அட்சாரம் போட
உங்றிங் கங் கங் கென்று நடுவே யெழுதி நூற்றெட்டு உரு
செபித்து விபூதி அணிய கணபதி வசமாவார் - குளிமுத்து பார்வை.

## கணை 18-க்கும் யெண்ணெய்

சித்தாமணக்கு முத்து படி — 2 பசுவின்பால் படி — 2
டிமுத்தை டி பாலில் அவித்து தண்ணீரில்லாமல் கிண்டி யிறக்கி

முடிவு :

## சகல புண்ணுக்கும் பிளாஸ்திரி — சிரங்குக்கு

வெத்திலைச்சார் விட்டு முறித்த ரசம் வராகனெடை — 1
சாதிலிங்கம் வராகனெடை — 1 துத்தநாகம் வராகனெடை — 1
வெள்ளைக் குங்கிலியம் வராகனெடை — 1 ஆக சேர்த்து நன்றாய் நுணிக்கி வைத்துக்கொண்டு நல்ல தேன் மெழுகு வராகனெடை — 5 தேங்கா நெய்விட்டு உருக்கி டி மருந்தைப் போட்டு நன்றாய்க் கிண்டி யிரக்கி செமபுச சிமிளில் வைத்துக் கொண்டு சீலையில் தடவி புண்ணில் போடத் தீரும்.

காலம் :

கடவுள் துணை

முகப்பு ஏட்டில் :

1041-ஆம் வருடம், சித்திரை மாதம் ஆரம்பம் செய்தது நல்லகுட்டிதேவன்யேடு.

நன்றாக குருவாழ்க குருவே துணை

குறிப்பு :

இதில், இடையிடையே வெற்றேடுகள் உள்ளன. ஏடுகள் வரிசையாக இல்லை. ஏடுகள் பிறழ்ந்தும், இடம் மாறியும் உள்ளன.

இதில், குழந்தைக்கு பேதி நிற்க, மாதளை நெய், குழந்தை மந்தத்துக்கும் பொறுமலுக்கும் முதலான குழந்தை மருத்துவமும், குதி வாதத்துக்கு, வீங்கு வாதத்துக்கு, சுரத்துக்கு பித்த வெடிப்புக்கு, எலி விசத்துக்கு, விஷங்களுக்கு மருந்து முதலான பொது மருத்துவமும் அடங்கியுள்ளன.

★ ★ ★

வரிசை எண் : 2773

சுவடி எண் : 1472 a

## அகத்தியர் குழம்பு

ஏடு : 1 கி. எண்ணிக்கை : 50 அளவு : 31 × 3 செ மீ.
பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 745-e / D 1470 போன்றது.

★ ★ ★

வரிசை எண் : 2774

சுவடி எண் : 1472-b

## அகத்தியர் — 16

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 100 அளவு : 31 × 3 செ மீ.
பக்கத்திற்கு : 8-9 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

குறிப்பு :

இது எமது சுவடி எண் 578-a / D 1191 போன்றது
இதில், 15 செய்யுட்களே உள்ளன.

★ ★ ★

வரிசை எண் : 2775

சுவடி எண் : 1472-c

## வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 124 (3—126) கி. எண்ணிக்கை : 5000 அளவு : 3 × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 8-9 வரிகள் ஆசிரியர் : பலர் பொருள் : மருத்துவம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

(3-ம் எட்டின் பின்புறம் கடைசியில்)

சுக்கு பலம் 3, மிளகு பலம் 3, கடுகு பலம் 3,
திப்பிலி பலம் 3, ஓமம் பலம் 3, சருஞ்சீரகம் பலம் 3
குரோசாணி ஓமம் பலம் 3, நற்சீரகம் பலம் 3
வாய்விளங்கம் பலம் 3, நறுக்கு மூலம் பலம் 3

முடிவு :

இந்த மருந்தை யெல்லாம் இடித்துத் தூளாக்கி எண்ணெயில் அரைத்துப் போடவும் ஒரு நாள் ஊரவைத்துக் காச்சி மெழுகு பதத்தில் வடிக்கவும் பழஞ்சோத்துக்கு மிக்கவும். பத்தியம் மோரு பழையது குளிர்ந்த தண்ணீர் பச்சை மீன் ஆட்டுக்கறி தவிர்க்கவும். வேறு.

காலம் :

1071-ம் வருஷம் ஆனி மீ 6
கோட்டாறு அனஞ்சப் பெருமாள் பண்டிதன் கை ஏடு புதியவன் எழுதினது.

குறிப்பு :

இதில், புண்ணுக்கு ரச மெழுகு, கணை எண்ணெய், மதனகாமீ சஞ்சீவி லேகியம், பஞ்சலோக செந்தூரம், ரசகெந்தி மெழுகு, உடும்பு லேகியம் மூல முளை கரைய, தலையில் புழு வெட்டுக்கு பிள்ளையுண்டாக மருந்து, காது இரைச்சலுக்கு, சங்கு பற்பம் சண்ட மாருதக் குழம்பு, அசுவ கெந்தி சூரணம், குழந்தைகளுக்கு வரும், அடி பட்டால் தைலம் முதலான பல அறிய மருந்துவங்கள் கூறப்பட்டுள்ளன. எளிய நல்ல முறைகள் உள்ளன.



வரிசை எண் : 2776 சுவடி எண் : 1472-ர்

## சுரநூல் - மரண கண்டிகை

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 100 அளவு : 31 × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்
நிலைமை : நல்லநிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

அசுபதி முதக்கால் பத்தின சுரம்
ஒன்பது நாள் விடும்
2-ங் காலில் பத்தின சுரம் 10 நாள் விடும்
3-ங் காலில் பத்தின சுரம் 15 நாள் விடும்
4-ங் காலில் பத்தின சுரம் - மரணம்

முடிவு :

ரேவதி 1-ங் காலத்தில் பத்தின சுரம் மரணம்
2-ங் காலத்தில் பத்தின சுரம் 11 நாள் விடும்
3-ங் காலத்தில் பத்தின சுரம் 18 நாள் விடும்
4-ங் காலத்தில் பத்தின சுரம் 21 நாள் விடும்
அதுதப்பினால் 30 நாளில விடும்

காலம் :

1071-ம் வருடம் ஆனிமாதம் 7-ந் தேதி வாலண பணடிதன் மகன் நெல்லயப்பன் பண்டிதன் மகன் புதியவன் கையெழுத்து சங்கரலிங்கம் வாத்தியார்கள் துணை.

குறிப்பு :

இது. எமது சுவடி எண் 109-d/D 164-ன் வேறாயது. இன்ன நட்சத்திரத்தில் இன்ன காலத்தில் சுரம் பற்றினால் இன்ன பலன் என்று கூறுகின்றது.

* * *

வரிசை எண் : 2777 சுவடி எண் :1 72-e

## நயன சூட்சம்

ஏடு : ½ (129) கி. எண்ணிக்கை : 20 அளவு : 31×3 செ.மீ
பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

கடுக்காய் நெல்லிக்காய் தானிக்காய்
சடாமாஞ்சி தேவதாரம் கோட்டம்

சந்தனம் கிரிசாத்துள பீச்சு
கருஞ்சீரகம் மிளகு வகைக்கு
டலம் 1 இடித்து

முடிவு :

வத்த காச்சி உரியாக்கி பேய்ப்புடலை
1 நாழி வெள்ளம் விட்டு வுளாக்கி குறிக்கி
மூணுபோது சாப்பிடவும் பத்தியம்
மச்சமாகாது சுகம்

காலம் :

கோட்டாறு அளஞ்சபெருமாள் பண்டிதர் கை வண்ணம்
பசுபதி அம்மாள் துணை

குறிப்பு :

இதில், கண்சிகப்பு, குத்து, தப்பளம், நயனம் தொண்ணூத்தாறுக்கு கோளிச்சாறு குடிக்க' எனும் மருந்து கூறப்பட்டுளது.



வரிசை எண் 2778 சுவடி எண் : 1472-f

## வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 21 (129-150) கி. எண்ணிக்கை : 1000 அளவு : 31 × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 8-9 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

வெள்ளாட்டு லேகியம்

மலட்டு ஆடு அறுத்து தோலியும் ஈரலும்
மூளையும் போக்கி குடலும் நன்றாய்க் கழுவிப்
போட்டு குடலும் எலும்பு சதையும்
தலையுங்காலும் குறுக தறித்து

முடிவு :

தாளகம் அடுக்குக் கல்சுண்ணாம்பு சிறுநீர்விட்டு
அதற்குள் தாளகத்தை வைத்து மூன்றுதரம் நீத்திப்
போடவும் முந்தின குகையில் வைத்து
மேல்மூடி போட்டு மூடி மூன்று சீலை மண்செய்து
காயவைத்துக் காடைப்பிடம் போட்டு
யெடுக்க பற்ப மாம்

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், வசியம், கிராணிக்க கிசாயம், தூவாலை எடுக்கிறதுக்கு சிறு சந்தறாதி. வாச்சை பித்தத்துக்கு எண்ணெய், காட்டேரி மந்திரம், வங்கம், மகாகுளிகை, திலதம் திரி வசியம், புருசவசியம், ஈடு, மேகத்துக்கு, கண்கட்டு அதிசயம் முதலானதுகள் உள்ளன.

★ ★ ★

வரிசை எண் : 2779 சுவடி எண் : 1472 g

## தேரையர் — 100

ஏடுகள் : 10½(150-160) கி. எண்ணிக்கை : 500 அளவு : 31×3 செ மீ.
பக்கத்திற்கு : 8-9 வரிகள் ஆசிரியர் : தேரையர் பொருள் : மருத்துவம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

நூறுக்குள்ள நொடிவாகடப் பெண்வி யாதியை
ஆர்சொல்வார்கள் இங்கங் கத்தி லுள்ளதை
மீறுகின்ற சுரங்கள்தனை மீக்கக் கூறு செய்யுங்
குருபார்த்திடேந் வாத பித்த சேசம்
+ + + + + +
சாமிருபத் திரண் டாற்றவேண்டி
யறிவு தனைச் சொ. வேன் — 4

முடிவு :

அப்புலி சந்திரன் அசேதிங்சட்கிழமை வசமதாம்
இந்தநூறும் வாகுடன் பார்த்த போதே
முன்ன வயித்திய ராவார் நெடும்புவி யுள்ளோர்
எல்லாம் திசைமுகன் அருளால் சொன்ன
தேரை செய்து கொண்டோர்
புசபல மிகவுண்டாகி புவிதனை பேர்தாமே ! — 101

காலம் :

பிரமன்முனி அருளிச்செய்த வயித்தியம்
தேரையர் அருளிச்செய்த வைத்தியம் பாட்டு - 100
1011-ம் வருஷம் ஆடிமாதம் 19-ந் தேதி வாலன் பண்டிதன்
குமாரன் நெல்லையப்ப பண்டிதன் மகன் புதியவன்
சங்கரலிங்க வாத்தியார் அவர்கள் துணை

குறிப்பு :

இதில் முதல் மூன்று பாடல்கள் இல்லை



வரிசை எண் : 2780 சுவடி எண் : 1472-1

## வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 35(161–195) கி. எண்ணிக்கை : 1800 அளவு : 31×3 செ.மீ.
பக்கத்திற்கு : 8—10 வரிகள் ஆசிரியர் : பலர் பொருள் : மந்திரம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

கலை

ஆம் டங்கடங் யின்னாள்மகள் இன்னாளும்
இன்னான் மகன் யின்னானும் பிரிய முறிய
சிவாது மந்திரக்காளி

(சக்கரம் இருக்கிறது)

முடிவு :

சூலை பதினெட்டு, லிங்கபுத்து, பாவையர் யோனி புத்து கண்டதத்தில் பத்திய மாலையும் போம் போமே. அட்டகுற்மம் வுடல் கரிபோக்கிடும் பொல்லாது பொல்லாத பேர்களுக்கெல்லாம் வலையென்று பூட்டினார் குப்பமுனி, கும்பமுனிக்கு முன்னாள் செந்தில் வளர் குகனுரைத்தமொழி அன்புடனே பஞ்சரத்தினாதி தன்னை அறிவிச் பல டிதரே.

காலம் :

1071-ம் வருஷம் மன்மதவருஷம் ஆவணி மாதம்4. வாவகுளம் தம்பிகட் கறையான் பண்டிதன் அனுபோக முறை கைவல்லியம் இது, நிசவேறுண்டி மருந்து அஞ்சுக்குபேரு லிங்கமலை—1, பூரமலை—1, வீரமலை—1, ரசமலை—1, கெந்தகமலை—1 என்குரு சங்கரலிங்க வாத்தியார்கள் துணை

இந்தப்படிக்கி எழுதினேன்: கல்லிடைக்குறிச்சி கோட்டத்தெரு வாலன் பண்டிதன் மகன் நெல்லையப்ப பண்டிதன் மகன் புதியவன்.

கடவுள் துணை ராமசெயம்,

1073-ம் வருஷம் ஆவணி மாதம் 30-தேதி

இந்த ஏடு எடுத்த பேர் வாசித்துப் பார்த்துக் குடுக்க வேண்டியது. அல்லாவிட்டால் பதினெண்பேர்கள் தோஷத்திலே னாசமாய் போகக்கடவது.

குறிப்பு :

இதில், பிரிவுக்கு மந்திரம், வசியம், விசமை, தனசுடி, பாம்புபிடி, நட்சத்திரபலன், சகல விஷத்துக்கும் மாட்டுக்கு புழுவிலக்க, விஷத்துக்கு மந்திரம், பித்த சேத்தும சுரத்துக்குக் கிஷாயம், வாந்தி விக்கலுக்கு கஷாயம் தலைவலிக்கு நாசிபுகை, அதிசாரத்துக்கு, வாத சன்னிக்கு கிஷாயம் முதலான பல தலைப்புகள் உள்ளன,



வரிசை எண் : 2781 சுவடி எண் : 1472-i

## பதினெண் பேர்கள் பாடலில் கை கண்டது

ஏடுகள் : 25 (196-220) கி. எண்ணிக்கை : 1250 அளவு : 31×3 செ.மீ, பக்கத்திற்கு : 8-12 வரிகள் ஆசிரியர் : பதினெண்சித்தர்கள் பொருள் : மருத்துவம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

முழுக எண்ணெய் – அரக்கெண்ணெய்

ஐயாந் தகரைச்சார் முசு முசுக்கைச் சார்
பையா யெண்ணெ
அய்யோ மூணுதரம் மத்தித்து ஆவின்பால் நாளி
செய்யா மதுரம் யீராறு சேர் யெரித்து தலைமுழுக
அய்யா சாசம் பித்தம் போம் அடைத்த நாசி திறந்திடுமே
ஆயப்பா தீராத காசந் தலைக்கு
அரக் கெண்ணைத் தயிலமதை அன்பாய்ச் சொல்லும்
\+ + + + + + + + +
தாமப்பா விருகன் சினங்கு தானும்
தயவாக யெண்ணைபடி தானும் வாங்கே ! — 1

முடிவு :

அனுபானம் குழந்தைகளுக்கு முலைப்பாலிலும்
பெரியவர்களுக்கு சோம்பு, திராட்சி, சுக்கு
இந்த கியாழங்களில் திரேக திடந் தெரிந்து
இரண்டு அல்லது மூன்று மாத்திரை கொடுக்கவும்
மனக்களிப்புடன் சுகுணமாய் பேதியாகும்.

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில் பூரண மாத்திரை, சுரம்நாச்சக்கோடாகுளிக் குளிகை, குழந்தைகளுக்கு லிங்க மெழுகு, கோரோசினை மாத்திரை, தாது புஷ்டிக்குப், வயத்துக் கடுப்புக்கும், சகல கிராணிக்கும் மருந்து, அயம் திரிகோல செந்தூரம், யீளை யிருமல் சுவாசங் காசங்களுக்கும் காந்தல் தீர, கிராணி பதினெட்டுக்கும் சுரம்ண விட்டு விட்டு வருகின்ற சுரத்துக்கு மருந்து முதலான பல தலைப்புகள் உள்ளன.



வரிசை எண் : 2782 சுவடி எண் ; 1472-j

## குடும்பமுனி பாடல் வைத்தியம் — 200

ஏடுகள் : 26 (221-246) கி. எண்ணிக்கை : 1000 அளவு : 31 × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 8-9 வரிகள் ஆசிரியர் : கும்பமுனி பொருள் : மருத்துவம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

சோதியென்ற யேகவெளி நிறமே காப்பு
சுந்தரியே வாலைகண பதியே காப்பு
நீதியா மென்குருவின் பாதங் காப்பு
நிலையாறுங் கடந்தசிவ யோகி காப்பு
சாதிவழி பேதமற்ற மணியே காப்பு
சரவணமே பவக்குமர பரமே காப்பு
வாதியாம் பதினெண்பேர் பாதங் காப்பு
மகத்தான பொற்குருவின் மூலங் காப்பே! — 1

முடிவு :

ஏகுமடா வீக்கமொடு தூக்கம் நேரவும்
எல்லாம்போம் பத்தியமே பெரிதென் றேனே! — 148

நெய்க்கோட்டம் மாதளம்பிஞ்சு கடுக்காய் மஞ்சள்
யிருள்ளி சங்கு புகட்டவும்
\+ + + + + +

ஆக யிவையெல்லாம் சாறுவிட்டரைத்து தேத்தாங்கொட்டையளவு உண்டை வைத்துக் கொண்டு குளிருங் காச்சலும் வந்தால் பத்தியம் உப்பு புளி ஆகாது. புகையிலை ஆகாது. தாம்பூரத் தகட்டில் அரிதாரம் தேன் விட்டரைத்து தகட்டில் பூசி ஓட்டில் வைத்து மூடிப் புடமிடவும். மறுபடி எலுமிச்சம்பழச்சார் விட்டரைத்து மறுபுட மிடவும் பற்பமாம்.

குருவேதுணை (சக்கரம் இருக்கிறது)

காலம் :

(முன் ஏட்டில்)

1073 ம் வருஷம் சித்திரை மாதம் 11-ந் தேதி புதியவன் பண்டிதன்.

(கடைசி ஏட்டில்)

1073 ஆம் வருஷம் விளம்பி வருஷத்தில் சித்திரை மாதம் 14-ந் தேதி வியாழக்கிழமை சித்திரை நட்சத்திரமும் அன்று பகல் நாழிகை அஞ்சு உள்ளாக எழுதினது. கல்லிடைக் குறிச்சி கோட்டைத் தெருவிலிருக்கும் வாலன் பண்டிதர் மகன் நெல்லையப்ப பண்டிதன் மகன் புதியவன்

என்குரு சங்கரலிங்க வாத்தியாரவர்கள் துணை.

கடவுள் துணை

கும்பமுனி துணை. குத்தால லிங்கம் துணை. முத்தையன் துணை

குறிப்பு.

இதில் 148 செய்யுட்களே உள்ளன. காந்தச் சூரணம், நாகைச் சூரணம் சிவதைச் சூரணம் பவள பற்பம், காலாந்த கெவுரி, பாண்டரச கர்ப்பூரம் அதர்மத் திருப் வியாதிகள், அஞ்சனம், அளப்பு குளைக்குத் தயிலம், மூலவாயுவுக்குக் சோழி பற்பம், பித்தத்துக்குத் தயிலம், வாய் மூக்கில் ரத்தம் விழுகிறதுக்கு, பேதி குழம்பு, இருமல் சுரத்துக்கு வேடு கட்ட சீதசுரமுங் குளிர் சுரமுந் தீரும் முதலான பல தலைப்புகள் உள்ளன.



வரிசை எண் : 2783 சுவடி எண் . 14[illegible]-k

## வைத்தியத் திரட்டு

ஏடுகள் 11(247-257)+2 கி. எண்ணிக்கை : 400 அளவு : 31 × 3 செ மீ
பக்கத்திற்கு : 6 - 8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

### 90 நாழிகை கற்பூரம்

லிங்கம் பலம் — 1 நவச்சாரம் பலம் — 1
அரிதாரம் பலம் — 1 வெடியுப்பு பலம் — 1
சீனக்காரம் பலம் — 1 வீரம் பலம் — 1
வெள்ளை பலம் — 1 சித்திர மூலம் பலம் — 1

முடிவு :

துருக்கம், வசம்பு, ரசகற்பூரம் லிங்கம்
பஞ்சள் மெழுகு வகைக்கு பலம — 4
மருந்தை இடித்து முலைப்பால் விட்டரைக்கவும்
தீரும் வியாதி : துடர் வாளை
தந்த சூலை புத்து அரையாப்பு
பரு சிலந்தி விசக்கடி
சருவது வீக்கமும் தீரும்

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், பால்களிம்பு, நீலகண்ட வாலை 200 நாழிகை எரிப்பு. காலாந்த கெவுளி 120 நாழிகை எரிப்பு குறிஞ்சிகள், முந்திரிகைப்பழம் ஞானம். மார்க்கண்டமெழுகு. வெள்ளு வங்கபற்பம், கருவங்கபற்பம், சவுக்காரக் குரு, காயம் லேகியம் முதலான பல மருந்துகள் கூறப்பட்டுள்ளன.

இதன் பின்னர் 2 சிறு ஏடுகளில் விஷம் இறங்க சக்கரங்களும் மந்திரங்களும் எழுதப்பட்டுள்ளன.

* * *

வரிசை எண் : 2784 சுவடி எண் : 1473-a

## நாடி வாகடம்

ஏடுகள் : 18(194-211) கி. எண்ணிக்கை : 1200 அளவு : $33\frac{1}{2} \times 3$ செ.மீ.
பக்கத்திற்கு : 8-9 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

மாதறாய் பித்தம் ரண்டு
சேற்றும மொன்று மாகில்
தீதறு தலைவ ருண்டு
பிடரி நொந்திடு மேலெல்லாம்
பேதமாய் வயரெரிந்து
தவனமும் பெருத்துக் காட்டும்

கோதில்லா பித்த சேத்தும
தொந்திப்புக் குணங்கள் தானே ! — 83

முடிவு :

இருமலே யிளைப்பு முண்டாய்
ஈளையு மிகுந்து வாங்கி
மருவிய வயிறு தானும்
மந்தி...........................
............ ............. ...........
............ ............யாகி
யருவியே யிருமல் நிற்கும்
ஆகிய சிலேற்றும மாமே ! — 239

குருபாதமே துணை

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், தொடக்க ஏடுகள் இல்லை. இது நாடி பார்த்து மருத்துவம் செய்கின்ற நூலாகும்.

* * *

வரிசை எண் : 2785 சுவடி எண் : 1473-b

## வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 5 கி. எண்ணிக்கை : 250 அளவு : $33\frac{1}{2} \times 3$ செ.மீ.
பக்கத்திற்கு : 7-8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து ; தமிழ்.

தொடக்கம் :

சாதிக்காய் பலம் — 1 சாதிப்பத்திரி பலம் — 1
கஞ்சாயிலை கூட்டி யிடித்து சரிவெல்லங்
கூட்டி யிடித்து விராகனிடையைப் போலே
குளிகை பண்ணனும் — 36

குளிகை செய்யணும் தினமொரு குளிகை
சாப்பிடவும் இந்தப்படி 6 மாசஞ் சாப்பிட்டால்
உடம்பு புஷ்டியாகும்

**முடிவு :**

சேத்ததொரு நெய்யதனை ரவியில் வைத்து
தினமூன்று சென்றுபின்பு அடுப்பி லேத்தி
நேத்திய விநாயகர்க்குப் பூசை பண்ணி
நெய்யதனைக் காய்ச்சியே யெறக்கிக் கொண்டு
போத்தியே ............ .........

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், பதினெட்டு குட்டத்துக்கு மருந்து, சடைகஞ்சா கற்பம், மலடிக்கு மருந்து கிறாணிக்கு, வெள்ளெழுத்துக்கு, ஈளை இருமலுக்கு, மூலக்கிராணிக்கு மோர்க் குழம்பு ஆட்டுப் படுபவனுக்கு, புனித மார்க்கண்ட நெய் ஆகியவை உள்ளன.

★ ★ ★

வரிசை எண் : 2786 சுவடி எண் ; 1474-a

## தன்வந்திரி வைத்திய சிந்தாமணி — 41

ஏடுகள் : 7 கி. எண்ணிக்கை : 250 அளவு : 38×3½ செ.மீ.
பக்கத்திற்கு : 6–8 வரிகள் ஆசிரியர் : தன்வந்திரி பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் ;**

கரந்த பால்மதுக்கண் டென்னுஞ் சொல்லுள்ளான்
பிறந்த வெற்பினில் பெண்கொடிப் பாலக
நிரந்த காலமெடுத்தா நாயகன்
சிறந்த தாளிலைனச் சேன்னியில் சூட்டுவாம். — 1

முடிவு :

தொல்லையுடல் கடுப்பெடுக்கு மொன்ப தானால்
சொர்க்கத்தில் நரகத்தில வர்புகு துன்பத்தில்
வல்லமையா ராராய்ந்து பரிக ரிப்பார்
மற்பொருள் சாஸ்த்திர மறியான் மருந்து செய்தால்
அல்லலுறு மாளவுத்திய நாமெய்தி
யவன்குலமுந் தீயநர கமடைவா ரானால்
நல்லதல்ல வாகடநூல் அறியான் செய்த
நல் மருந்துங் காலனாம் நவிலு சீரே ! — 41

ஸ்ரீராமஜெயம்

குருவே துணை

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், எட்டுவிதக் குறியாலும் நாடியாலும் குணமறிதல், மாச நாடி, நாடி நடையறிதல், பித்தகுணம், சேட்டுமகுணம், கரிகளின்குணம், மரணக்குறி ஆகியவை பேசப்படுகின்றன.

இதன் பின்னர் அம்மாவாசி சாத்திரம் என்ற ஒரு ஏடு உளது.

★ ★ ★

வரிசை எ : 2787

சுவடி எண் : 1471-b

## கௌசிகமுனி குழம்பு

ஏடுகள் : 5 கி. எண்ணிக்கை : 200 அளவு : 33×3½ செ.மீ
பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : கௌசிக முனிவர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

கொன்னைக் கொழுந்து கருங்கடுக்காய்ப் பொடியும்
எண்ணெயில் கொள்ள ஏங்கலுப்பிசம் போமே
சன்ன யிருமல் சத்தி உள மாந்தைக்குஞ்
சொன்னநல் மோருடன் சுக உளஞ்சல் பட்டையில்
கருக யிருமல் கண்டிப்பு தீரயிருநேரங் கொள்ளு

முடிவு :

மண்ணதில் வாழு மனித ரெவர்க்கும்
உண்மையாய்ச் சொன்னோம் ஓர்குழம் பதனால்
குருவருளாலே கூறினோம் மகிழ்ந்து
கௌசிகமா முனிதானே.

குருமுன்னிற்க

கௌசிக மாமுனி குழம்பு முற்றும்

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், ஷ குழம்பு செய்முறை, தீரும் நோய்கள் கூறப்பட்டுள்ளன,



வரிசை எண் : 2788 சுவடி எண் : 474-C

## அகத்தியர் வைத்திய பூரண சூத்திரம் - 8

ஏடுகள் : $1\frac{1}{2}$ கி. எண்ணிக்கை : 100 அளவு : $33 \times 3\frac{1}{2}$ செ.மீ.
பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

சீரணியும் பூரணத்துள் தேவி பாதம் போற்றி
சிகத்திலுள்ள பெரியோர்கள் பாதம் போற்றி
வாரணியும் முலைமடந்தை தையல் மின்னாள்
வைத்தியத்தில் லெட்சம் வளமாய்ச் சொன்னேன்
காரணியும் மதத்தானைக் கடவு ளாணை
கங்கைபிறை கன்னிசெஞ் சடையா னாணை
ஆரணியும் அகத்தியனா ரோது மின்னூல்
அந்தணர் பாதமுதல் காப்புத் தானே ! — 1

முடிவு :

போகுமடா குன்மமென்ற தெல்லாம் போகும்
பொல்லாத நீரழிவு கிரந்தி சூலை
தாமடா தலைசுத்தல் பித்த ரோகம்
தருவான உள்வீக்கம் குமர கண்டன்போகும்
நாமடா சொல்லிவிட்டேன் யெட்டுக் குள்ளே
நலமான பூரணசூத் திரமு முற்றே ! — 8

காலம் :

இல்லை

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 248-g D 438 போன்ற தெனினும் கடைசிப்பாடல்கள் வேறுபடுகின்றன.

* * *

வரிசை எண் : 2789

சுவடி எண் : 1474-d

## வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 19 கி. எண்ணிக்கை : 600 அளவு : 33 × 3½ செ.மீ.
பக்கத்திற்கு : 4-7 வரிகள் ஆசிரியர் : பலர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

### மேகத்துக்கு எண்ணெய்

| | |
|---|---|
| கீழா நெல்லிச்சார் சேர் | 3 1/8 |
| எலுமிச்சம் சாறு சேர் | 3 1/8 |
| பொன்னாங்காணிச்சாறு சேர் | 3 1/8 |
| ஈரவெங்காயச்சாறு சேர் | 3 1/8 |
| விளக்கெண்ணெய் சேர் | 3 1/8 |
| குமரிச் சாறு சேர் | 6 1/4 |

முடிவு :

| | |
|---|---|
| தறநீசி அக்கிறாபீ | குரோசானி ஒமம் |
| அபின் | பச்சை தண்ணியில் |
| சாதிப்பத்திரி | அரைத்து கால்ரூபா |
| லவங்கம் | யெடை 3 பங்கு |
| | செய்யவும் |

காலம் :

இல்லை

குறிப்பு :

உதிரி, ஏடுகளாக உள்ளன. இதில் மேக எண்ணெய் ஒரே மாதிரி 2 ஏடுகளில் காணப்படுகின்றன. மேலும் மேக சிட்டை, கருப்பு சிவப்பு சிட்டைகள், சந்திர கிராணம மோகிமை (மகிமை?) இஞ்சிலேகியம், கெந்தக செந்தூரம், பாஷாணக்கட்டு முதலியன உள்ளன.

* ★ *

வரிசை எண் : 2790 சுவடி எண : 1 75

## கருவூரார் பலதிரட்டு

ஏடுகள் : 22 கி. எண்ணிக்கை : 1000 அளவு : 29×3 செ.மீ.
பக்கத்திற்கு : 7—9 வரிகள் ஆசிரியர் : கருவூரார் பொருள் : மருத்துவம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் ;

பாடுகிறேன் பலதிரட்டு முடிவை யெல்லாம்
தவறாமல் சிதறாமல் பண்பாய் மக்காள்
பாடுகிறேன் சாஸ்த்திரமும் தோத்திரமு மளைந்து
பாஷையெல்லாம் பிறக்கியொரு மாலை யாகப்
பாடுகிறேன் கருக்கிடையுங் குறுக்கிடையு மொன்றாய்
பருவமுட னொருமித்து நன்றாய்த் தானே
பாடுகிறேன் வேதாந்த முடிவை யெல்லாம்
பரையாளுங் கிணேசன்குகன் காப்புப் பாரே ! — 1

முடிவு :

நாட்டுவாய் வராகத்தின் சிரசு தன்னில்
　　நற்சூதங்க ளஞ்சுபத்து விட்டுத் தைத்து
நாட்டிடுவாய் மணஞ்செய்து சாம மூன்று
　　நட்பாக எரித்திடவே திரண்டு நிற்கும்
நாட்டிடுவாய் காக்கையொன்று ..............

காலம் :

இல்லை

குறிப்பு :

இது எமது சுவடியெண் 507 /D 1105 போன்றது.

இதில், சூதமெழுகு, வங்கம் வலிம்பம்பு, நாகம், அஞ்சனம், பொன்னாவிரை அஞ்சனம் விஷ்ணுகிரந்தி, பல்லரைமூலி அஞ்சனம், பாஷாணம், செம்பு சுத்தி, தம்பனக் குளிகை, பறட்டை மூலி, குருவை நெல்லு, வெண் தாமரை, லிங்கப்பூச்சு, நாகபற்பம், வக்கா கருவறியும், லிங்கபுருக்கு முதலியன உள்ளன.

★ ★ ★ ★

வரிசை எண் : 2791　　　　　　　　　　　　　　　　　சுவடி எண் : 1476

## பிரமமுனியார் வைத்தியம் — 700

ஏடுகள் : 195　　கி. எண்ணிக்கை : 6000　　அளவு : 27½ × 3½ செ.மீ.
பக்கத்திற்கு : 7 வரிகள்　　ஆசிரியர் : பிரமமுனி　　பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது　　முழுமை : முற்றற்றது　　எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

திருவளரு மெய்ஞ்ஞான மூர்த்தி பாதம்
　　செப்பெரிய கிணேசனொடு கந்தன் பாதம்
அருவுருவா யாதியந்த வெளியுந் தாண்டி
　　அகண்டுநின்ற சின்மயத்தின் பாதம் போற்றி
　　+ + + + + +

பாரப்பா பெருநூல்தான் மூன்று காண்டம்
　　பாடினே னதைக்குறுக்கி மூன்று நூறு

சேரப்பா ஞானமொடு வாத மார்க்கம்
செப்பரிய வயித்தியமு மஷ்ட கர்மம்
ஆரப்பா வகைவிபர மாகச் சொன்னார்
அறியாத பசளைக்கு மறிய வேண்டி
சீரப்பா கருக்குருவுந் திறந்து சொன்னேன்
செப்பியதோர் நூல்களுக்குத் திறவுகோலே ! —

முடிவு :

வசியமாய்ப் பாடிவைத்தேன் எட்டு காண்டம்
மைந்தனே அதைக்குறிக்கி யெட்டுநூறு
வசியமாம் வெட்டவெளி யாகச் சொன்னேன்
மகத்தான யின்னூலைக் காட்ட வேண்டாம்
கசிந்துமன முருகியே முறைதப் பாமல்
கைபாகஞ் செய்பாக மறிந்து செய்யே ! — 697

செய்யவே ஆசானை யடுத்து...........

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், 23-வது ஏடு முன்பகுதி முறிந்து பின்பாதி கடைசியில் சேர்க்கப்பட்டுள்து. தலைப்பு 700 என்றுளது. 697-ஆம் பாட்டில் எட்டுநூறு என்று பாடப்பட்டுளது.

இதில், வாத முப்பு, முப்பு செய்யும் முறை, வாதம் எண்பதுக்கும் எட்டிக் கொட்டைத் தயிலம், நிலவாகைச் சூரணம் ஆனந்த வயிரவன் முதலான பல தலைப்புகள் உள்ளன.

★ ★ ★

**வரிசை எண் : 2792** **சுவடி எண் : 1477-a**

## ரோமரிஷி — 16

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 200 அளவு : 35 × 5½ செ.மீ.
பக்கத்திற்கு : 15-16 வரிகள் ஆசிரியர் : ரோமரிஷி பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

.............. மூர்த்தியுரைத்தோன் முதனூல்
..........களுக்குத் தொடுகுறியும் பிடிநிலமுந்
தோணு ..............

முடிவு :

ஆகாதோ வேலையிலே கண்டார் சிப்பி
ஆகாச விந்துவல்லோ முத்தாய்ப் போச்சு
சாகாதோ யின்ன......... லானைக் கல்லு
சத்தியுவர் சூடனங்கே சத்தே பட்டால்
வேகாதோ யினமினமுஞ் சேர்ந்த தாலே
வெண்கிளிஞ்சி கெற்பநீர் விட்டார்க் கெல்லாம்
போகாதோ குருமுடிக்கும் பாக மெல்லாம்
பூட்டறிந்து பார்த்தவர்க்குப் போக்குத்தான் முற்றே ! — 16

காலம் :

இந்த செவடி சோமத்தார் மகன் வீறாசாமி

குறிப்பு :

இது, கூந்தற்பனை ஏட்டில் எழுதப்பட்டுளது. ஏடுகளின் மேல் ஓரம் பழுது பட்டிருப்பதால் 3 வரிகள் தெரியவில்லை. ஏடுகள் ஒடிந்துள்ளன.



வரிசை எண் : 2793 சுவடி எண் : 1477-b

## மச்சமுனி — 20

ஏடுகள் : 3 கி.எண்ணிக்கை : 300 அளவு : 35 × 5½ செ.மீ.
பக்கத்திற்கு : 15-16 வரிகள் ஆசிரியர் : மச்சமுனி பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

உந்... ... ... ... ... ... ... ...
.........பிரணவங்கொண் டுலக்க யாளுஞ்
தந்தியெனும் ஐங்கரனைத் தொழுது
இந்திர சாலமெனும் ......த்தீரனார் காப்பில்

விந்தையுள்ள கருமரைப்பு விபரந் தோற்ற
விளம்பியதோர் மச்சனெனும் முனிவன் சொல்ல
யெந்தையுள்ள படியுரைத்தோன் லோகத் தோர்க்கு
மின்பமெனும் கருக்குருவிள் சூசத்தீர் காய்யே ! — 1

முடிவு :

கொள்ளுவது ஆரெண்டால் வாத யோகி
குருவருளால் வாதசித்தி காண்பான் பாரு
கொள்ளுவது ஆரெண்டால் மந்திர வாதி
கூறறிந்து அஷ்டசித்தி மேவு வான்பார்
கொள்ளுவது குருபதத்தை நித்தம் போற்றி
கொண்டாடிக் கூசாமல் நிற்பவரே குருவைக் காண்பார்
கொள்ளுவது ஐங்கரன்தன் பதத்தை நித்தம்
கொண்டாடி வழலைரெண்டு புத்து முற்றே ! — 22

கலாம் :

1830-ம் வருஷம் ஆகஸ்ட்டு மாதம் 29-ந் தேதி ஞாயிற்றுக்கிழமை துதுரிசி மினட்டில் சேர்ந்த செமேதார் ரெங்கப்ப னாயக்கர் குமாரன் வீராசாமி எழுதி முடிந்தது. புஷ்த்தகம்.

குருவே துணை

குறிப்பு :

இதில், கொடி சுன்னம், குடத்துநீர் ஆகிய மருந்துகள் பேசப்படுகின்றன் இது கூந்தற்பனை ஏட்டில் எழுதப்பட்டு மேல் ஓரங்கள் 3 வரி அளவுக்கும் பழுதுபட்டுள்ளன

இதன் பின்னர் இருமலுக்கு மருந்து எழுதப்பட்டுளது.



வரிசை எண் : 2794 சுவடி எண் : 1177-c

## ரோமரிஷி பாடல் — 50

ஏடு : 6 கி. எண்ணிக்கை : 600 அளவு : 35×5½ செ மீ.
பக்கத்திற்கு : 15—16 வரிகள் ஆசிரியர் : ரோமரிஷி பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

காலம் ;

இந்த சாஸ்த்திரம் துதுரிசி மினட்டில் சேர்ந்த செமேதார் ரெங்கப்ப னாயக்கர்க்கு, மஹன் வீராச மி ரோமரிஷி அன்பது யெழுதி முடிந்தது.

முற்றும்

குருவே துணை

ஞாயத்துக்கிழமைக்கு நிறைந்தது முற்றும்

குறிப்பு :

இது எமது சுவடி எண் 647/D 1270 ரோமரிஷி வாத சூத்திரம் 50 போன்றது. கூந்தற்பனை ஏட்டில் எழுதப்பட்டுளது. மேல் ஓரங்கள் பழுதுபட்டுள்ளன.

★ ★ ★

வரிசை எண் 2795

சுவடி எண் : 1477-வீ

## அகத்தியர் நரசிங்க லேகியம் — 16

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 200 அளவு : 35 × 5½ செ.மீ.
பக்கத்திற்கு : 15-16 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

நரசிங்க லேகியம்

சாத்தரிய (பொதிகை)வரை
............ நின்று தவங்கள் செய்து
ஷேற்றுஅறு தினப்போற்றி குக்குட மூர்த்தி
யிணையடியை மறவாம.........

முடிவு :

தேய்த்திடா நரசிங்க லேகி யந்தான்
துன்மார்க்கர்க் கீயாதே தோசம் தோசம்
மார்க்கமடா வியாதியெல்லா மாறிப் போகும்
வ்யாதியமாம் பேர்களுக்கு மாதந் தின்ன

பூத்திடவும் பூவுண்டாம் காயி காய்க்கும்
பொன்னிறம்போல் தேகமுமாம் பொய்யே யில்லை
பாத்திடவே பதினாறு பாட்டுக் குள்ளே
பரமகுரு சொன்னபடி பாடினேனே! — 16

அகஸ்தீசர் நயினார் அருளிச் செய்த நரசிங்க லேகியம்

எழுதி முடிந்தது முற்றும்

குருவே துணை

காலம் :

இது ரெங்கப்ப சுபேதார் குமாரன் வீராசாமி எழுதினது முற்றும்.

குருவே துணை

குறிப்பு :

இது, கூந்தற்பனை ஏட்டில் எழுதப்பட்டுள்ளது. எமது சுவடி அகத்தியர் — 16 என்பவைகளில் வேறாயது. லேகியம் செய்முறையும் அதன் பலனும் கூறப்பட்டுளது.

★ ★ ★ ★

வரிசை எண் : 2796 சுவடி எண் : 1477-e

## வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 5 கி. எண்ணிக்கை : 500 அளவு : $35 \times 5\frac{1}{2}$ செ.மீ.
பக்கத்திற்கு : 15—16 வரிகள் ஆசிரியர் : பலர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

எ : மூடாமல் சிறிதுசனம் வேதாந் தங்கள்
முகப்பாடம் பண்ணியல்லோ பிரசங் கித்து
வீடேது உடலேது யோக மேது
வீண்பேச்சாய்ப் பேசியல்லோ மாண்டு போனார்
காடேறி மலையேறி நதிக ளாடி
காய்கனிகள் சருகுதின்ற காமத் தீயாய்ச்
சூடேறி மாண்டவர்கள் கோடா கோடி
சுருபமுற்றுப் போரவர்கள் சுருக்கந் தானே! — 8

முடிவு :

### மலட்டுப்பூச்சி விழ

தாரன்திரி யானவுடனே - கோழிமுட்டை
வெள்ளைக் கருவில் கொடிவேலி
வொரைத்துக் குடிக்கவலி மிகுதியா யெடுக்கும்
பூச்சி செத்து விழும். மேலே கரு
கைகண்டது

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், தலையிடிக்கு எண்ணெய், குளிர்ச்சி யெண்ணெய், மூலத்துக்கு யெண்ணெய் முதலான மருந்துகளும், குணங்களும் உள்ளன.



வரிசை எண் : 2797 சுவடி எண் . 1478-அ

## சுரசாத்திரம்

ஏடுகள் 4 கி. எண்ணிக்கை : 150 அளவு : 33 × 3 செ மீ.
பக்கத்திற்கு : 6 – 7 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிக செல்லரித்த நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

சிவமயம்

திருவருளின் செயலயா னறியேன்பர தேவதைநீ
தருபர மவற்றினி யென்று ..................
சொல்வதுந் தாரணிமேவ
அருள்தரும் குருவேதப் பொருளுமெய்யாகு
மென்றாகில்
கருது மென்னென்னப் படி கூட்டி
ஆவதென்னைக் காப்பதுவே

சுரம் இருபத்தெட்டுக் கும் சுரசாத்திர மறியவும்
நட்சேத்திரம் யிருபத்தேழுக்கும் பார்க்க சுரநூல் சாத்திரம்

அசுவதியில் பற்றினால் ............னாள் நிற்கும். அதில் நில்லாதே போனால் 1
நாளில் நிற்கும். பரணியில் .........11 னாள் நிற்கும். அதில் நில்லாதே போனால் 15
நாள் நிற்கும்.

முடிவு :

30 பிறை கண்டி... வியாதியிருக்கும். ஆனால் நல்ல வயித்தியன் 2 குணத்துக்கு
வரும் வியாதிக் குறிப்புக்கு இந்தப்படி பிறை சாஸ்த்திரம் பார்த்து செய்ய சகல...
வியாதியுந் தீரும்.

சுரசாஸ்த்திரம் முற்றும்

குருவேதுணை

காலம் :

இல்லை

குறிப்பு :

இது, இன்னநாளில் சுரம் பற்றினால் இத்தனை நாளில் விடும் என்ற குறிப்போடு
எழுதப்பட்டுள்ளது.



வரிசை எண் : 2798 சுவடி எண் : 1478-b

## அகத்தியர் வாகடம்

ஏடுகள் : 39 கி. எண்ணிக்கை : 1500 அளவு : 33 × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 6–7 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகமிக செல்லரித்த நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

(தேவரே) வாழ்த்தும் யாரதை யாண்டும் யாவரே
யெனக் குறவாகித்
தேவரீ ரல்லா லறிமுக மெனக்குத்
திருவுள மறிய வேருளதோ
+ + + + +

## அகத்தியர் நாடிநூல்

கரிமுக னடியை வாழ்த்திக்
கைதனில் நாடி பார்க்கில்

முடிவு :

......ல்லாந்து கிடக்கவும் வாதந் தீரும்
பத்தியம வெள்ளிரும் பாலும்.. வேறு..
மிந்த ..... ப்பாற்க எல்லையில் எழுந்த
எழுபத்தீராயிரம் வியாதியுந் தீரும்
அகஸ்த்தியர் ........ வேண்டியது

காலம் :

இல்லை

குறிப்பு :

இது எமது சுவடி எண் 322-உ,D-614 போன்றது. நாடிலட்சணம் போன்றது.



வரிசை எண் : 2799 சுவடி எண் :1478-ட

## கருவூரார் பலதிரட்டு

ஏடு : 34(45–78) கி. எண்ணிக்கை : 1500 அளவு : 33×3 செ.மீ.
பக்கத்திற்கு : 4 - 6 வரிகள் ஆசிரியர் : கருவூரார் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகமிச் செல்லரித்த நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

...... ன்னறகே... ......
சடையாய்க் கொண்டு
பாலிற்ப ...... .. ......

முடிவு :

யிரண்டு மிளகத்தனை வெற்றிலையில்
வைத்துக் குடுக்கவும். விஷம் வாங்கும்
இது கை கண்டது. பத்தியம் பச்சரிசி
பாசிப்பயறு கஞ்சி காச்சிக் குடுக்கவும்

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், வசீகரம் மோகன மூலிகை, கிராணிக்கு கிஷாயம் மேகவெட்டைக்கு, ஒட்டிய புண்ணுக்கு, கல்லெரிப்புக்கு, பாரிச வாயுவுக்கு, மூலத்துக்கு, பித்த ரோகத்துக்கு மருந்து சூரண ராசன் சகலவியாதியும் தீரும் முதலான பலதலைப்புகள் உள்ளன. மிகவும் பழுது பட்டதனால் கையாள்வது கடினம்.

★ ★ ★

வரிசை எண் : 2800 சுவடி எண் : 1478-ሰ

## அகத்தியர் சிந்தாமணி

ஏடுகள் : 92 (78-169) கி. எண்ணிக்கை : 4000 அளவு : 33×3 செ மீ.
பக்கத்திற்கு : 6-8 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

பிடித்திருந்த கல்லுக்குப் பேர்தா னேது
பிரமூலின் தேவதையின் பேர்தா னேது
அடுத்திருந்த சுழுமுனைப்பா வின்னதுதா னேது
அணிவிரலும் சிறுவிரலும் மிரண்டங் கேது
தடுத்திருந்த பண்டிதத்தின் யையிக்கபறத்தானங் கேது
தாங்காம லெடுத்துவிர தானங் கேது
படுத்திருந்த பண்டிதனே யிந்த நூலை
பகுத்தறிவீர் யின்னதென்று பகரு வீரே !

முடிவு :

கண்புனலிறங்கு வகுறதனால் பிடித்து வாட்டக்
கக்கிவிடுந் தயிலத்தைப் பதனஞ் செய்து
கண்ணிலிடத் தொண்ணூத்தாறு வியாதியும் நீங்கும்
பலிக்கும் பாரே பறங்கிப் பண்டிதம்

சுகசன்னி நடுக்க

முற்றும்

(சுறா..........சக மறிவினுமை யுண்டா சாத்திய வண்ணங்காணே !)

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், விஷத்துக்கு, மருந்து சுத்தி சிந்தாமணி, தண்ணி தாகத்துக்கு மருந்துகள் சுத்தி, வாத சூலைக்கு குளிகை, மண்டூரத்தயிலம், குமரித்தயிலம் பண்ணும் வகை, சூதக வாயுவுக்கு, வஞ்சினைக்கு, எழுஞாயிறுககு, செவ்வட்டை கடிக்கு, பித்த பாண்டு வின் குணம், கலியாணகிருதம், செம்பூரான்கடி, செவ்வட்டைக்கடி முதலான எட்டு வகைக்கு மருந்து, சகல களிச்சலுக்கும் தயிலம் முதலான பல தலைப்புகள் உள்ளன.

★ ★ ★

வரிசை எண் : 2801 சுவடி எண் : 1478-e

## (குணவாகடம்)

ஏடுகள் : 22 (169-190) கி. எண்ணிக்கை : 1000 அளவு : 33 × 3 செ.மீ
பக்கத்திற்கு : 7-8 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

**தொடக்கம்**

**விஷ தோஷத்தின் குணம்**

ஒருமையாம் விஷம்தோ............
ஒருக்கா லிருக்கால் நாலுதரம்
பெருமையாம் சுரம்நடுக்கல் பேணியே
விட்டுவிட்டேகும்
அருமையாஞ் சிரசுநோதல்............

**முடிவு :**

பொக்கமுடன் பிரமையுண்டு பொய்யே சொல்லும்
போதவே யுடல்நடுக்கும் புளித்துப் பார்க்கும்
மிக்கனந்தான் நாளெட்டு யில்லைப் பார்த்து
மிதுகுணத்து வாராது யேல மாதே
நக்கனார் அகஸ்தியர்க்கு அருளிச் செய்த
நன்னூலின் விதிப்படியே நயந்து பாரே! — 134

**கிஷாயம்**

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், சிம்ம தோஷத்தின் குணம், கிஷ்ண தோஷத்தின் குணம், அசாத்திய லட்சணத்தின் குணம், பித்த பாண்டுவின் குணம், சோகைக் குணம், வாத சரீரத்தின் குணம், பித்த சரீரத்தின் குணம், சிலேத்தும சரீரத்தின் குணம், அதிசார கோசம், குளிகை. அதிசார கபாடம், சன்னி வாத சுரத்தின் குணம் முதலான பல தலைப்புகள் உள்ளன.

* * *

வரிசை எண் : 2802 சுவடி எண் : 1478-J

## வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 5(191-195)+1 கி. எண்ணிக்கை : 200 அளவு : 33×3 செ.மீ. பக்கத்திற்கு : 7—8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம் நிலைமை : மிக மிக செல்லரித்த நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

அண்டவாதம் விரைவாதம்

| | | | |
|---|---|---|---|
| லிங்கம் | பலம் — | ½ | பொரிச்ச வெங்காரம் பலம் ½ |
| பெருங்காயம் | ,, | ½ | இஞ்சிசார் |
| ரசம் | ,, | ½ | நாலுசாமம் |
| ரசசெந்தூரம் | ,, | ½ | அறப்பு தேன் |
| வாளம் | ,, | 1 | 2 - சாமம் |

முடிவு :

கட்டிக் கொண்டு பாகு பதத்தில்
சூரணம் கொட்டி கிண்டி பசுநெய்
படி - 4, தேன் படி - 2, விட்டு
கிண்டவும். அந்தி சந்தி

விராகனிடை சாப்பிடவும்
தாது புஷ்ட்டி இந்திரிய விருத்தி
ரெத்தம் ஊர, த்ரேகம் மினுமினுப்பு

ஸ்ரீ போகம் தள்ளவும்.

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், அந்தர வாய்வுக்கு சஞ்சீவி மெழுகு, வலிப்புக்கு நசியம், நிலாவாரைச் சூரணம், சிவன்வேம்புச் சூரணம், பயித்தியத்துக்கு (நடுவில் உள்ள ஒரு ஏடு) மதன விந்தாதி லேகியம் முதலியன உள்ளன.



வரிசை எண் : 2803 சுவடி எண் : 1478-g

## அகத்தியர் கல்நன்றாடு சூத்திரம் — 16

ஏடுகள் : 3 கி எண்ணிக்கை : 200 அளவு : 33 × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 8-9 வரிகள் ஆசிரியர் ; அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

உத்ததொரு சமுத்திரந் தன்னில் பிறந்த
உசிதமென்ற கல்நன்று செய்கை கேளு
கற்றவர்கள் அறிவார்கள் கல்லாதார்
கசடருக்குத் தெரியாதய்யா
குற்றமென்ற தெரிந்தெடுத்து (செ)ய்ய மாட்டார்
கூறுகிறோம் நன்றாய்நீ நீதான் கேளு
சுத்தமாம் பொறிக்காரம் விராகனிடை ரெண்டில்
சூட்சமுடன் நல்லஜலம் படிதான் வாரே ! — 1

**முடிவு :**

நாற்றிசையும் தொண்டாளு தன்றிப்பூ சாத்தில்
நன்றாக கல்நன்று தன்னைச் சேர்த்து

தீட்டிடவே கணைணு ரெண்டில் அப்பா கேளு
திடமாக யெள்ளழவு யெட்டு நாளே ! — 13

யெட்டுநா ளிட்டவும் நேத்திர ரோகம்
யெளிதாகப் போச்சுதடா தொண்ணூத் தாறும்
முட்டாக முருங்கை விரை ......... .........

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில் நோத்திர ரோகங்களுக்குரிய 'கல்நண்டு சூத்திரம்' என்ற மருந்து கூறப்பட்டுள்ளது.

★ ★ ★

**வரிசை எண் : 2804** **சுவடி எண் : 1479-a**

## புலிப்பாணி — 500

ஏடுகள் : 97 கி. எண்ணிக்கை : 5000 அளவு : 36×4 செ.மீ.
பக்கத்திற்கு : 7-8 வரிகள் ஆசிரியர் : புலிப்பாணி பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

அண்டரண்ட மாகிநின்ற வரனே காப்பு
ஆனந்த மாகிநின்ற உமையாள் காப்பு
குண்டமெனும் குண்டலியின் குறியே காப்பு
குமரகுரு வேல்முருகர் பாதங் காப்பு
புண்டரிக மானதிரு மாலுங் காப்பு
புகழ்பிரமன் முதற்குலிச னைவர் காப்பு
கண்டமெனும் மாருதம்போல் வைத்தி யத்தில்
சாத்துகிறேன் போகருட பாதங் காப்பே !

**முடிவு :**

நவின்றிட்டோம் புவிதனிலே வைத்திய மார்க்கம்
நன்றாகச் சொல்லிவைத்தே னிந்தநூல் வேண்டும்

பவின்றிட்ட நோயாளர் வைத்தி யோர்க்கு
பண்பாகத் தொழுதேத்தித் தாம்பூல மீய்ந்து
இவின்றிட்ட மவையெல்லாம் அவர்க்குச் சொல்லி
இதம்பெறவே செய்தபின்பு அவிழ்தங் கொள்வாய்
கவின்றிட்ட போகருட கடாட்சத் தாலே
காசினியில் புலிப்பாணி ஐந்நூறு முற்றே. — 501

குருகடாட்சம்

வேலும் துணை

தெட்சணாமூர்த்தி துணை

**காலம் :**

இல்லை

குறிப்பு :

இது எமது சுவடிஎண் 503/D 1099 போன்ற தெனினும் இதில் முழுமையும் உளது. ஏட்டு எண் 50க்குப்பின் 60 என்ற எண் குறிப்பிடப்பட்டுளது.

இதில், சன்னிக்கு மேல் பூசத் தயிலம் வாய்வுக்குத்தலுக்கு கியாழம், செய்யான் பெருச்சாளி கடிக்கு தேள் கடிக்கு மூலிகை, கற்பூரக் குளிகை அரிதார பற்பம் முதலான பல தலைப்புகள் உள்ளன.

மருத்துவரை நோயாளி எவ்வாறு போற்ற வேண்டும் என்பது கடைசிச் செய்யுளால் அறிய முடிகிறது.



வரிசை எண் 2865 சுவடி எண்: 1479-b

## வைத்திய சாத்திரம் — அட்டவணை

ஏடுகள் : 33 கி. எண்ணிக்கை : 1000 அளவு : 36×4 செ.மீ.
பக்கத்திற்கு : 7—8 வரிகள் ஆசிரியர் : பலர் பொருள் : மருத்துவம
நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

குறிபார்க்கிறது

சகலமான அவிழ்தம் சூரணம் பஸ்பம்
கற்கம் லேகியம் ஆக்கிராணம் எண்ணெய்
நசியம் மாத்திரை இவைகள் எல்லாத்துக்கும்
கைமுறை அறியும்படி

குருகிடாட்சம்

முடிவு :

அதுஞ்செந்தூரமாக வென்றால் சுத்திபண்ணின அரைப்
பொடியை நெல்லிக்காய் சாத்தில் மத்தித்து உலத்தி
குகையிலிட்டு கெசபுடம் அல்லது கொல்லன்
உலையில் குறுணி கரிபோட்டு ஊதினால்
வால சூரியனைப்போலே பிறசமனம் பூத்திருந்தால்
பின்னையும் போடலாம் செந்தூரம் ஆகும்

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், சன்னி பதின் மூன்றின் குணம், பதின்மூன்று வகைசன்னிக்கு, ஏழுவகை தோஷத்துக்கும் மருந்து, பரங்கிப்பட்டை ரசாயனம், வில்லாதி லேகியம், உள்க்காச் சலுக்கு மருந்து, பட்சிதோஷத்துக்கு மருந்து, ராச வயித்தியம், பெரும்பாட்டுக்கு, யெலும்புருக்கிக்கு, யோனி சூலைக்கு மருந்து முதலான பல தலைப்புகள் உள்ளன.



வரிசை எண் : 2806 சுவடி எண் : 1480

## அகத்தியர் சௌமிய சாகரம் — 1200

ஏடுகள் : 115 கி. எண்ணிக்கை : 6000 அளவு : $37\frac{1}{2} \times 3\frac{1}{2}$ செ.மீ.
பக்கத்திற்கு : 6-8 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் ; மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

சோதியெனும் மனோன் மணியைத் தியானஞ் செய்து
சுகமாக சவுமியசா கரத்தைப் பாட
ஆதியெனுங் கணபதியும் வல்லபையுங் காப்பு
அரசான பிரமனோடு சரசுவதியுங் காப்பு
நீதியெனும் மாலுடனே லட்சுமியுங் காப்பு
நின்றிலங்கும் ருத்திரனும் ருத்திரியுங் காப்பு
ஓதியதோர் மயேஸ்வரனும் மயேஸ்வரியுங் காப்பு
உறுதியுள்ள சதாசிவனும் மனோன்மணியுங் காப்பே !

முடிவு :

தானென்ற ஆனந்தந் தானே தானாய்
தண்மையுட நின்றநிலை தானே கண்டு
வானென்ற கேசரியில் மௌனம் ஒட்டி
வரிசையுடன் அண்டகே சரத்தில் சென்றால்
யேனென்று மனோன்மணிதான் முன்னே நின்று
யின்பரச வமுர்தமது மீய்.............. — 1030

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், இடையிடையே (115–199) 84 ஏடுகள் இல்லை. இது எமது சுவடி எண் 348/D 691 போன்றதெனினும் இதில் 1200 என்றும், அதில் 100 முற்றும் என்றுளது.

இதில், ரேசக பூரக கும்பகம், ஆதாரபூசை, ஐம்புலம், கரணம் நான்கு, ஆத்ம தத்துவம் 24, பூரண சந்திரன், நாக்கு நுனி, அனுகதம், ருத்திரதியானம், சண்முகத் தியானம், சிவபூஜை விபரம், சிவயோகக் குறிப்பு, சாதிலிங்கக்குரு, அண்டபிண்டம் அறிய முதலான பல தலைப்புகள் உள்ளன.



வரிசை எண் : 2807 சுவடி எண் : 1481-a

## சத்தியாரூடம்

ஏடுகள் : 18 கி. எண்ணிக்கை : 800 அளவு : 38×3 செ.மீ.
பக்கத்திற்கு : 7-8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

வெத்தியா தவத்தோன் கும்ப
    யேயிமுன் பதத்தைப் போற்றி
சத்தியா ரூடந் தன்னில்
    அரும்பொருள் தன்னை யாய்ந்து
மூத்தியாய் விருத்தம் நூறும்
    மொளிதற் கென்று நாவால்
அத்திமா முகத்தோன் மிக்க
    அடியினை சென்னி வைப்பாம் — 1

முடிவு :

விரித்திட்டேன் சத்தியா ரூட மான
    விருத்தமான ஒருநூறும் வேத மாகும்
வருத்தமாய் மனம்பத்திப் பார்ப்பார் கோடி
    மா நிதியும் பெற்றுமென்மேல் வாழ்வார்
தரித்திரிய மணுகாது தற்ம முண்டாம்
    தாரணியில் சித்தர் வந்து தருவார் புத்தி
கருத்துடனே அய்யாவும்தான் காட்சி தருவார்க
    ளொருநூறு முற்றே ! — 103

காலம் :

வெங்கா செட்டியார் மகன்
சுப்பா செட்டியார் எழுதினது
மனோசிய் பட்டி

குறிப்பு :

இது எமது சுவடி எண் 613/D 1234 போ.எறது.

இதில், முதற்பாடல் அதிகமுளது. ருத்திர அஞ்சனம், பிரிமாத்திரை, சங்கர வயிரவன். கீரி அஞ்சனம், ராமபாணாதி மாத்திரை, பஞ்சபாணக் குழம்பு, சிந்தாமணி, சஞ்சீவி உண்டை, திருமூலகண்ட சூரணம், விநாயக நசியம். நனிச்சக் குளை குடோரிக் குளம்பு முதலான பல தலைப்புகள் உள்ளன.



வரிசை எண் : 2808 சுவடி எண் : 1481-ப

## தெட்சிணாமூர்த்தி வைத்தியம் — 80

ஏடுகள் : 17 கி. எண்ணிக்கை : 1000 அளவு : 38×3 செமீ.
பக்கத்திற்கு : 7-8 வரிகள் ஆசிரியர் : தெட்சிணாமூர்த்தி பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

ஹரி ஓம் நன்றாக

அரன் கயிலை விட்டுநான் தெச்சணத்தில் வந்து
அளவாந்த கோடிசித்தர் முனிகள் ரிஷிகளுமாய்ப்
பரந்ததொரு பொதிகைதனில் இருக்கும் போது
பாடினதோர் வாதமொடு வயித்தி யந்தான்

**முடிவு :**

முத்தியுள்ள அறுநூறும் நன்றாயப் பாரு
முறையோடே ஆயிரத்தைந் நூறும் பாரு
வெத்தியுள்ள கர்மகாண்ட முன்னூறும் பாரு
பேர்பெத்த கடைக்காண்டம் ஐந்நூறும் பாரு
எத்திசையும் மெய்க்குங்குரு முடிக்கும் சூத்திரம்
யெண்பது நாற்பத் தாறும் பாரு
பத்தியுடன் செந்தூரம் முப்பத் தாறும்
பருபகுதி மதிசுடரைப் பணிய முற்றே ! — 81

குருபாதந் துணை

ராமமூர்த்தி துணை

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இது எமது சுவடி எண் 585 / D 1203 அகத்தியர் வைத்தியம் 80 போன்றது. அகத்தியரும் தெட்சிணாமூர்த்தியும் ஒருவரே போலும்.

இதில். தெசநீரில் மலடிக்கி லேகியம், மலடிக்கி புழுவிழுக, பாலில்லாத பேருக்கு அஷ்டகுன்மத்துக்குப் பவளபற்பம், ரெத்தமூலத்துக்குக் கசாயம் முதலான தலைப்புகள் உள்ளன.

* * *

வரிசை எண் : 2809 சுவடி எண் : 1481-C

# தெட்சிணாமூர்த்தி பற்பம் — 205

ஏடுகள் : 35 கி. எண்ணிக்கை : 2100 அளவு : 38×3 செ.மீ.
பக்கத்திற்கு : 7-8 வரிகள் ஆசிரியர் : தெட்சிணாமூர்த்தி பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

பூரணமா மும்மூலப் பொரியில் சூடாய்
　　புகையெழும்பி மேகமதாய்ச் சிரசில் சூடாம்
காரணமா நீர்கலந்து கண்ணில் ரோகம்
　　கனலெழுந்த வாயுவினால் சூலை ரோகம்

**முடிவு :**

நோய்மிகுந்து சாவதில்லை யொருநா ளுந்தான்
　　னுன்னுமையாய்ச் சரக்குகளை நீற்றிக் கொண்டு
வாயமுட னெண்ணையோடு கிருதம் செய்து
　　வைத்திடுநீ அனுப்பானம் வரிசை கண்டு
தாய்பதத்தைப் பூசித்து வயித்தியம் பாரு
　　சதானந்த பூரணமே தனதா முற்றே ! — 20௦

ஸ்ரீ ராமசெயம்

தெட்சணாமூர்த்தி அருளிச் செய்த வயித்தியம் 205
எழுதி முகிந்தது முற்றும்

**காலம் :**

இரக்தாட்சி வருஷம் கார்த்திகை மாதம் 21-ந் தேதி ஞாயிற்றுக்கிழமை பஞ்சமி திருவோண நட்சேத்திரத்தில் குருநூல் எழுதி முகிந்தது. வெங்கா செட்டியார் மகன் சுப்பாசெட்டி எழுதினது.

சாமிதான் முன்னிற்க வேண்டியது.

**குறிப்பு :**

இது எமது சுவடி எண் 556/D 1163, எண் 562/D 1169 அகத்தியர் வைத்தியம் 205 போன்றது. முன்சுவடி போலவே இதுவும் இருவரையும் ஒன்றாக்குகிறது

★ ★ ★

வரிசை எண் : 2810 சுவடி எண் : 1481-d

# அகத்தியர் வைத்தியம் — 50

ஏடுகள் : 10 கி. எண்ணிக்கை : 500 அளவு : 38×3 செ மீ.
பக்கத்திற்கு : 7-8 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஆதிகவ காரத்துக் கான வயித்தியத்தில்
பொதிகை அன்பதில் முப்புப் புகலுவேன் - துதிகை
வாரணத்தான் பாத மறவாம லென்னாளும்
காரணத்தான் தேவிபதங் காப்பு !

முடிவு :

பாலான திறமுடைய பிரம னாவான்
பாரிலே வாழ்வதற்குக் குருவு மாவான்
செயலான திருவுடைய செல்வ னாவான்
சிந்தையிலே களங்கமற்ற சித்த னாவான்
நாலான மணியொற்றும் பிரமனார் சொன்ன
நலமுடைய முனிவர் மொழி நாடி முற்றே ! — 50

அகத்தீசுபரர் நாயனாரருளிச் செய்த வயித்திய

மன்பது எழுதி முடிந்தது

முற்றும்

ஸ்ரீ ராமசெயம்

காலம் :

இல்லை

குறிப்பு :

இது, ஏமது சுவடி எண் 580-a, D 1195 போன்றது.





வரிசை எண் : 2811 சுவடி எண் : 1481-e

## திருநடன சூத்திரம் — 48

ஏடுகள் : 8 கி. எண்ணிக்கை : 500 அளவு : 38×3 செ.மீ.
பக்கத்திற்கு : 7–10 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் ;

நாடியதோர் பூரணமாம் வேதாந் தத்தில்
திருநடன சூத்திரத்தைப் பாட
மூடியதோர் கணபதியுங் கந்தன் காப்பு
(அருள்) பெருகும் ரிஷிகள்முதல் சித்தர் காப்பு

முடிவு :

நானென்ற சாம்பிராணி குடன் ரெண்டு
நலமாகச் சீலைமண் செய்து காடைமூன்று
வேனென்ற சாதிலிங்கம் வெகுநோய்க் காகும்
விளங்கிடும் நாற்பத்தி யெட்டு சூத்திரந்தானே — 48

(இதன் பின்னர் சரக்குக்கட்டு எழுதிய உரைநடை மருத்துவம் உளது)

காலம் :

இல்லை

குறிப்பு :

இது எமது சுவடி எண் 628-/D-1249 போன்றது.

★ ★ ★

வரிசை எண் : 2812 சுவடி எண் : 1481-f

## வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 5+15 கி. எண்ணிக்கை : 1000 அளவு : 38×3 செ.மீ.
பக்கத்திற்கு : 7-9 வரிகள் ஆசிரியர் : பலர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

சந்தனாதித்தயிலம்

மாதருட மோகம் வருந்தினால் மானிடரே
தாதுகெடும் நீரழிவு தான்தோன்றும் - போதவே
காங்கை யெடுத்துக் கண்சிவந்து கஞ்சித்தண்ணீர்
வாங்கியுடல மெத்த வரளுமே - பரங்கியரே

முடிவு :

பிடவைதனி லிம்மருந்தைத் தாளிதமாய்த் தேய்த்துத்
தரிப்பிடிக்க மானனையீர் இத்தனைக்குஞ்
ச னிக் குளம்பதற்கு முற்றும்
குருமுன் நிற்க வேண்டியது

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், காதில் வியாதிக்கு சீலகளை தெரிசினை, உச்சித கலிக்கம் (இத்துடன் ஒரு பகுதி முடிகிறது) கிஷாயம் மருந்து. கெர்ப்பநோய்க்கு எண்ணெய் செம்பு சுத்தி, உப்பு செந்தூரம், வயிரவபூசை, வாயுவுக்கு அஷ்டலேகியம், வாடைமருந்து, சகலசெவ்வாப் புக்கு எண்ணெய், மதனகாம லேகியம் முதலியன உள்ளன.

★ ★ ★

வரிசை எண் : 2813 சுவடி எண் : 1481-ஐ

## வைத்தியம் – 360 (அகத்தியர் ரெத்தினச் சுருக்கம்)

ஏடுகள் : 34 கி. எண்ணிக்கை : 2000 அளவு : 38×3 செ மீ.
பக்கத்திற்கு : 7 9 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்து
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

சுந்தரானந்த வயிரவமாத்திரை

பூரணமாய் நிறைந்த கும்ப னார்தாள் போற்றி
புகலுகிறேன் வயித்தியரெத்தினச் சுருக்கந் தன்னை
வாரணமர் முகத்தோனைப் பணிந்து போற்றி
வயித்தியந்தான் முன்னூற்றி யறுப துக்குள்

முடிவு :

தீங்கென்ற வாதமெல்லாம் சிதரிப் போகும்
..சவாய்வு மலபெந்தம தீருந் தீரும்
பாங்குடனே யித்தயிலஞ் சொன்னோ மின்னும்
குறுக்கினோம் வெந்தோன்றிக் கிழங்கின் போக்கே — 202

கிழங்குதன்னை நிழலுலத்தித் தயிலம் வாங்கி
கேளப்பா கிழங்கு ......... .........

காலம் :

இல்லை

குறிப்பு :

இது எமது சுவடி எண் 566 a/D 1176 அகத்தியர் ரெத்தினச் சுருக்கம் போன்றது. இச்சுவடியின் பாடலில் வயித்திய ரெத்தினச் சுருக்கம் 360 என்னும் தலைப்பு, வைத்தியம் 360 என்றும் உள்ளது. 566-ம் எண் சுவடியில் 262-ஆம் பாடல் முடிந்ததும் முற்றும் என்றுளது.

இதில், ஆனந்த வயிரவன், சுயமக்கினி மாத்திரை, சிலோதாரி மாத்திரை, பஞ்சதீபாக்கினி லேகியம் முதலான பல தலைப்புகள் உள்ளன.

★ ★ ★

வரிசை எண் : 2814 சுவடி எண் : 1481-h

## வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 16 கி. எண்ணிக்கை : 1000 அளவு : 38×3 செ.மீ.
பக்கத்திற்கு : 7-9 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் முதலானோர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம்

அகஷ்த்தியர் குளம்பு

பெருங்காயம் கடுகிந்துப்பு
ஏசம் பொற்காரம்
மனோசிலை திப்பிலி மரிதாரம்
தகடதாகும் கருஞ்சிரகம்

முடிவு :

## வீரமெழுகு

வீரம் வராகனெடை — 1 சீனிக்காரம் வராகனெடை — 1
மொசு மொசுக்கைச் சாறு முருங்கைப்பூச்சாறு
சுருக்கம் குடுக்கவும் மேராகாரம் அனுப்பானம்

குன்மத்துக்கு மிளகு, சன்னிக்கி இஞ்சிச் சாறு, காய்ச்சலுக்கு சுக்கு வாயுவுக்கு கருப்பட்டி குன்மத்துக்குத் தேன.

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில் உதிரி ஏடுகளாக தனித்தனி மருத்துவங்கள் உள்ளன. அகத்தியர் குழம்பு ஒரே ஏடு வெண்பா, மீளை இருமலுக்கு சலவிஷத்துக்கும் தூள், கருங்கோழிச் சூரணம் மூலத்துக்கு மருந்து, சூதக வாயவுக்கு, வெட்டை வெள்ளைக்கி முதலான மருந்துகள் கூறப்பட்டுள்ளன.



வரிசை எண் 281 சுவடி எண் : 1482

## மாட்டு வாகடம்

ஏடுகள் : 13 கி. எண்ணிக்கை : 500 அளவு : 25½ × 2 செ.மீ.
பக்கத்திற்கு : 3–6 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை ; முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரிஓம் நன்றாக
குருவாழ்க குருவே துணை
மாட்டுவாகடம்
ஒட்டு நீராளியின் குணம்

அறுவருத்து வெய்யிலில் உலந்து நிற்கும்
இதுக்கு மருந்து எள்ளும் சிறுநீரும்
புகட்டவும் நெஞ்சிலே குறுக்கிட்டுச்
சூடு சுடுவது

முடிவு :

கண் பூவில் விழுந்த மாட்டுக்கு

சிறு குறிஞ்சாத் தளையும் உப்பும்
ரெண்டையும் கசக்கி ஊத்தவும்
ஆயிடுதா விட்டால் பசும்பால் சரிஉப்பு
சரிபாலும் ரெண்டும் அரைச்சு உருண்டை
செய்து தினம் (குடுக்கவும்)

காலம் :

விரோதிகிருது வருஷம் தை மாதப் 6-ந் தேதி வெள்ளிக்கிழமை எழுதி நிறைவேரினது. முசத்து கோ மங்கலம் பரியாரி திருவேங்கிடம் மாட்டு வாகடம். எடுத்தவன் குடுக்கவும்.

மண்டு கருப்பண்ணன் துணையாக வேணும்
பூணாச்சியம்மன் துணையாக வேண்டியது

குரு கிடாட்சம்

குறிப்பு :

இதில், நீர்க்கடுப்புக்குணம் உடுக்கை நோவின் குணம், யிலவநோவின் குணம், வரினோவின் குணம், தலைப் புத்து நோவின் குணம், குடல் வியாதியின் குணம், கிரைனோவின் குணம், பேராமை நோவின் குணம், காயமாரி கொண்ட மாட்டுக்கு முதலான மருந்துகள் கூறப்பட்டுள்ளன.



வரிசை எண் : 2816 சுவடி எண் : 1483-a

## சுந்தரானந்த சுவாமி அருளிச் செய்த அதீத வாக்கியம்

ஏடுகள் : 31 (இடையிடையே ஏடுகள் இல்லை) கி. எண்ணிக்கை : 400
அளவு : 30×3 செ.மீ. பக்கத்திற்கு : 6-7 வரிகள் ஆசிரியர் : சுந்தரானந்தர்
பொருள் : மருத்துவம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது
எழுத்து : தமிழ்.

தொடக்கம் ;

ஹரி ஓம் நன்றாக

அரிஓம் அரகர அக்கனவு மாகி
அதிலேதான் சுளித்தயிரு சுளியு மாகித்
தெரியாத பொருளாகிச் சித்தரியு மாகிச்
சிவனுமாய்ச் சந்தியுமாய் ரெண்டு மொன்றாய்
தரியாத நிற்மோடரிதை அரிந்தால்
தாயான மவுனத்தை அறிவா னய்யா
விரிகமலத் தோனறியா ளிந்த மூலம்
வேதாந்தஞ் சித்தாந்தம் வெளிவி டானே ! — 1

முடிவு :

நமசிவய மென்றதுமுத லக்ஷரமு மாகும்
னாடிநீ நினைத்ததெல்லாந் தருகு முண்மை
+ + + + + + + + +
நமசிவாய லமநமசி வாயா வென்னில்
நற்செயமாம் பூமிகளைக் கொடுக்கும் பாரே ! — 260

பாரப்பா சவ்வுநம சிவாய மென்றால்
பரிவாக ராசதரு வுண்டா பாரு
ஆரப்பா சிறீயும்நம சிவாய மென்னி
லப்பனே காந்த ……… ………

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், யீடு, வாடை, தகட்டு நிதானம், அரவம் கடித்தால், விஷத்துக்கு மருந்து, அஞ்சனம், விஷத்துக்கும் சன்னிக்கும், திலதம், பிசாசு விஷம், தோஷம் இதுகளுக்கு மந்திரம், சன்னிக்கி, சுற்பம் நாக பற்பம், வாடைக்கி வாசம் கூட்டும் வகை, லேபனம், சற்பம் பேதத, குருவருளால் புத்தி சித்தி, புத்தி சொல்வது, வங்கறச வெள்ளை, அஷ்டகர்மம், அஷ்ட்ட கற்ம மூலிகை, தேக நோய் தீர, மாயா அட்சரம், புத்தி வித்தை நல்கும், நினைத்தபடி நடக்கும், பதிகண்டி சுரத்துக்கு, அறுபத்து நாலு விஷத்துக்கு ஆகியன உள்ளன.

* * *

வரிசை எண் : 2817 சுவடி எண் ; 1483-b

# கெருட பஞ்சாட்சரம்

ஏடுகள் : 7 கி. எண்ணிக்கை : 100 அளவு : 30×3 செ.மீ·
பக்கத்திற்கு : 6-7 வரிகள் ஆசிரியர் : சுந்தரானந்தர் பொருள் : மருத்துவம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

ஹரி ஓம் நன்றாக

கெருட பஞ்சாட்சரம்

கணபதியும் கந்தனும் துணை.

ஓதிய பிடாரர்க் கெல்லாம்
யுத்தகோ டாலி யாகும்
வாதென வுரைத்த தோரா
னால்வலித் திடுங்கத்தி யாகும்

**முடிவு :**

கொள்ளும் தெய்வங் கிரவி
குறிக்குந் திங்கள் பிடார ரரியதாம்
துள்ளுஞ் செவ்வியத் துற்கை ......
சொல்லும் புதனில் சரசுபதி
தெள்ளும் வியாழக் கிழமை யெனில்
சிறந்தவே லன்னெனு முருகன்
வெள்ளிக் கணபதி .............. — 51

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இது, எமது சுவடி எண் D 1476 / 745 - K போன்றதெனினும் பாட வேறுபாடுகள் மிகுதியும் உள்ளன. தலைப்புகள் தரப்படவில்லை. அதைவிட இது நல்ல பிரதியாகக் காணப்படுகிறது.



வரிசை எண் : 2818 சுவடி எண் : 1484-a

# இராமதேவர் பட்சணி

ஏடுகள் : 29 கி. எண்ணிக்கை : 800 அளவு : 29½ × 2½ செ.மீ
பக்கத்திற்கு : 6-8 வரிகள் ஆசிரியர் : இராமதேவர் பொருள் : மருத்துவம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுப்பெறாதது எழுத்து : தமிழ்.

தொடக்கம் ;

ஹரி : ஓம் நன்றாக

ஆதியந்தம் நடுவிருந்த சோதி பாதம்
அகண்டபரி பூரணமே அரிவே காப்பு
நீதிகலை வாணிகுரு கந்தன் காப்பு
நிரஞ்சனமா நிற்குணமா வதீதங் காப்பு.

முடிவு :

அல்லடா பசுக்களு(க்கு) ஞாலை யீந்தால்
அந்திரயிடி விழுந்துதலை தெரிக்குமாரு
வெல்லடா நிற்கோடி சித்து மாடும்
வேதாந்த பட்சணி அதிக முற்றே ! — 108

காலம் :

இல்லை

குறிப்பு :

21-வது ஏடு இல்லை. கையெழுத்து வெவ்வேறாக உள்ளது. இது, எமது சுவடி எண் D 1219 / 601 போன்றது. பிழைகள் மலிவு. பாட வேறுபாடுகள் அதிகம்.

இதில், ஆறு வகை வசியம், ஆவின் புல்லுருவி, செம்பருத்தம், மை, வசியம், மோகனம், தம்பனம், ஆதியெண்ட பிண்டம், காய்த் தயிலத்தில் சர்க்கரை, மாற்றம், சூத செந்தூரம், சால வித்தை, விஷ்ணு மூலி, ஆகாசகுடை, சன்னி பேய் சுரம் போக ஆகியவை உள்ளன.



வரிசை எண் : 2819 சுவடி எண் : 1484-b

## வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 39 (21 முதல் உள்ளன. இடையிடையே ஏடுகள் இல்லை)
கி எண்ணிக்கை : 1000 அளவு : $29\frac{1}{2} \times 2\frac{1}{2}$ செ.மீ. பக்கத்திற்கு : 6-8 வரிகள்
ஆசிரியர் : பலர் பொருள் : மருத்துவம் நிலைமை : பழுது
முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

...... ..... வெவ்வேறே சுத்தி செய்து
பிலப்பதற்குப் பூனீறு களஞ்சி யொன்று
சீராகக் கல்வத்திற் பொடித்துக் கொண்டு
சிறக்கவறை நாற்சாமங் குமரிச் சாற்றால்
பாராக வில்லைசெய்து உலந்த பின்பு
பண்பாகப் பிடம்போட விபரங் கேளே ! — 65

**முடிவு :**

வில்லைதனைக் குப்பிக்குள் ளிட்டு நீயும்
விபரமுடன் சில்லிட்டு சீலை செய்து
நல்லநவ னீதத்தைக் குமரிச் சாற்றால்
நயமாக ஆட்டியந்த குப்பிக்குள் பொதிந்து
வல்லதொரு தாளியிலே கல்லுப் பிட்டு
வைத்த ......... ......... .. ......

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

ஏடுகள் தலைதடுமாற்றமாக உள்ளன. இதில், படை, சொறி, பூசை விதி, லிங்க செந்தூரம், வீரம், வைப்பு, கலியுக மாற்கம், அஷ்ட கற்மம், வித்து வேஷன மூலி, பேதனம், சிதம்பரம், பஞ்சாட்சரம், உச்சாடனம், தேக நோய் தீர மந்திரம், மோட்ச சமாரச் சித்தி, தேக சித்தி, தானியம் பெருக பலிக்கும், வசியம் சிலரோகம், அக்கினிக் கடு, அகோரம், வருண சிவம், விஷதம்பிதம் முதலியன உள்ளன.



வரிசை எண் : 1820 சுவடி எண் : 1485-a

## இராமதேவர் சூத்திரம் — 50

ஏடுகள் : 16 கி. எண்ணிக்கை : 400 அளவு : $29\frac{1}{2} \times 3$ செ.மீ.
பக்கத்திற்கு : 6-7 வரிகள் ஆசிரியர் : இராமதேவர் பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

ஹரி ஓம்

ஆதியிலே வாலைமனோன் மணித்தாய் கூவி
அழைத்திட்டு ஆதியந்தம் அறியச் சொன்னாள்
சோதியிலே கருவுரை உன்னிப் பாரு
சொல்லவொண்ணா அதிசயங்கள் தானே தோத்தும்

**முடிவு :**

யெட்டுமிரண்டு மறிந்தவர்க்கே யெய்து மெய்தும்
மில்லாட்டா லின்னூல்தான் கிட்டாதப்பா
துஷ்ட்டருடன் ஒருநாளும் கூட வேண்டாம்
துடியாக ஒருவரையும் பேச வேண்டாம்
மிஷ்ட்டமுட னின்னூல்தான் னம்பத் தொன்றும்
எகதமாய் மவுனமுட னிருந்து கொண்டு
அஷ்ட்டாங்க யோகமதைத் தினமும் பாரு
அருளான மனோன்மணிதான் காப் ாள் முற்றே! — 51

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இது, எமது சுவடி எண் D 577 / 316 - b போன்றது. அதில் இராமதேவர் பட்சணி - 50 என்றுளது, 50 பாடல்கள் உள்ளன. இதில் 51 - பாடல்கள் உள்ளன. பாட வேறுபாடுகள் மிகுந்துள்ளன.

இதன் பின்னர் வைத்தியம் எழுதிய ஒரு ஏடு காணப்படுகிறது.



வரிசை எண் : 2821 சுவடி எண் : 1485-b

## சுந்தரானந்தர் சூத்திரம்

ஏடுகள் : 10 கி. எண்ணிக்கை : 200 அளவு : $29\frac{1}{2} \times 3$ செ.மீ.
பக்கத்திற்கு : 6 வரிகள் ஆசிரியர் : சுந்தரானந்தர் பொருள் : மருத்துவம்
நிலைமை : ஒடிந்துள்ளது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

ஹரி : ஓம் நன்றாக

சீரான உமைதேவி பாதம் போத்தி
செகமகிழுஞ் சுந்தரனார் புவியே மெய்க்க
பேரான அதி செயத்துள் முப்பத் தாறு
பிரியமுடன் பாடுதற்குக் குருவைப் போத்தி.

**முடிவு :**

கஞ்சனமாம் உருவேத்தி பூசை பண்ணு
கடினபடா அதிசயந்தான் முப்பத்தாறும்
துஞ்சிவிட்டால் கிடையாது அதிஷ்டம் வேணும்
சொல்லார்கள் குருபாதம் சொல்லொண் ணாரே ! — 36

சுந்தரானந்தர் முப்பத்தாறு முற்றும்

மீனாட்சி அம்மன் துணை

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இது, எமது சுவடி எண் 621/D. 1242 போன்றதெனினும் பாட வேறுபாடுகள் மிகுந்து காணப்படுகின்றன. 5-ஆம் ஏட்டில் மோடி என்ற தலைப்பு உள்ளது. 7, 8 ஆகிய இரண்டு ஏடுகளும் தொடக்கம் முறிந்துள்ளன.



வரிசை எண் : 2822 சுவடி எண் : 1486

## வைத்திய அட்டவணை

ஏடுகள் : 134 கி. எண்ணிக்கை : 2000 அளவு : $19\frac{1}{2} \times 4$ செ மீ.
பக்கத்திற்கு : 4– 1 வரிகள் ஆசிரியர் : பலர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

சுரங்களுக்குக் கசாய அட்டவணை

வாத சுரந்துக்குக் கசாயம்

வாதமடக்கி ஆக சேர்த்து நருக்கி
யாமணக்கு சரி தண்ணீர் விட்டு
பெருமல்லி
செறுப்படி எட்டொன்றாகக்
சித்திர மூலம் குடுக்க வாத சுரம்
வகைக்கி பலம் $\frac{1}{4}$ பரந்தோடுமே

**முடிவு :**

.........மாத்திரை

கெவுரி — கடுகுறோ................
திரிகடுகு கோரோ..................
ஆக வகைக்கி ...............................
பாவையிலை சாரு ..............................
அரைக்கவும் ...............................

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், கொடூரமான வாத சுரத்துக்கு, பித்த சுரத்துக்குக் கிசாயம், வேதினை செய்யும் பித்த சுரம், தாப மிகுந்த பித்த சுரம், சேத்துமத்துக்கு கிசாயம், வாத பித்த சுரக் கஷாயம், வாத சிலேத்தும சுரத்துக்கு. வெடியுப்புச் சுன்னம், கெந்தக பற்பம்,

கருஙெங்க செந்தூரம், சகல வியாதிக்கும், தாம்பிர பற்பம், அண்ட வாதத்துக்கு லேகியம். பரங்கிப்பட்டை எண்ணெய், தாளிசப் பத்திரிச் சூரணம், குன்மத்துக்கு, லிங்கக்கட்டு முதலான பல தலைப்புகள் உள்ளன.

★ ★ ★

வரிசை எண் : 2823 சுவடி எண் : 1487 a

## வைத்திய நிகண்டு அகராதி

ஏடுகள் : 35 கி. எண்ணிக்கை : 600 அளவு : 21×3 செ.மீ.
பக்கத்திற்கு : 7-9 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : அகராதி
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

அரி யென்பது பூலோகம்
அக மென்பது வான்லோகம்
அகி லெ பது ஆகாயம்
அத்திர மென்பது
அண்ட மென்பது
உணர்த்த வறிவது
யாதொறு அடக்கம்
அகமென்பது கொந்தக் குணம்

முடிவு :

சபால் திப்பிலி
சபின் வசம்பு
சம்பங்கிப்பூ செம்பகப்பூ
சழங்கை வறசுண்டி (இவ்வளவே உள்ளன)

(பின் பக்கம்)

அண்ணன் தம்பி ரெண்டுபேரு பாகம் பேற்பாதி பிரிச்சு விடவும். ஆனை அஞ்சுபணம். குதிரை முக்காபணம். கழுதை காப்பணம். உருப்படி 100 வாணும். பணம் நூறு வரணும்

காலம் :

இல்லை

குறிப்பு :

இது, நல்ல அகராதியாகத் தெரிகின்றது. முழுமையும் கிடைப்பின் பயனுடைத்தாகும்.



வரிசை எண் : 2824 சுவடி எண் : 148-b

## மவுன பரதேசி சொன்ன வாக்கியம்

ஏடுகள் 89 கி. எண்ணிக்கை : 1300 அளவு : 21 × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 5-8 வரிகள் ஆசிரியர் : மவுன பரதேசி பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

பாரப்பா அப்பரிஷி ஆற்று மாவை
பரிசலிக்கும் பூதங்கள் வயது கேளு
நேரப்பா பத்தாண்டி லிளமை போகும்
நிலையான இருபதிலே வளத்திப் போகும்,
ஆறப்பா முப்பதிலே அழகு போகும்
அப்பனே நாற்பதிலே மேனிபோகும்
சேரப்பா அன்பதிலே மணக்கீரைச் சேரும்
சிரந்தசிட மூத்திருந்து நரைக்குந் தானே ! — 1

முடிவு :

| | |
|---|---|
| சதி குன்மம் | சேஷ்ட்டும மூற்சை |
| வலி குன்மம் | முசல கண்ட மூற்சை |
| எரி குன்மம் | மத்து முள்ள வியாதி |
| சூசிகா வாய்வு | யெல்லாம் தீரும் |
| மூற்சித்த வாய்வு | சுப்புற அக்கினி குமாறன் |
| சன்னி மூற்சை | செந்தூரத் துக்கு............ |
| பித்த மூற்சை | வியாதி யெல்லாம் தீரும் |

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், பாஷாணம், வெடியுப்பு, பதங்கம், திருநகள்ளி வுப்பு, மாட்டு வாகடம், சவாரிகோளி, மதுகாடீர மசாலை, முசிறி கோலி, வாதப் புடிப்புக்கு, குன்மத்துக்கு மருந்து, வயித்திய அட்டவணை, தாது லட்சணம், சயரோகத்துக்கு கஷாயம், கால் புந்துக்கு, பேதிக்கு லேகியம் முதலான பல தலைப்புகள் உள்ளன.

* * *

வரிசை எண் : 2825 சுவடி எண் : 1488

## வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 94 கி. எண்ணிக்கை : 1000 அளவு : 19 × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 4-8 வரிகள் ஆசிரியர் : பலர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

| | | |
|---|---|---|
| தங்கம் | $1\frac{1}{2}$ | வேலிப்பருத்திப் பூச்சாறு |
| அரிதாரம் | 2 | விட்டு அரைத்துக் கவசம் |
| வெடியுப்பு | 2 | கட்டி மேலே உத்தாமணி |
| சீனம் | 2 | வேறு அரைத்துக் கவசங் |
| சவ்வீரம் | 2 | கட்டி மேலே மூணு |
| கரியுப்பு | $\frac{1}{2}$ | சீலை மண் செய்து |

**முடிவு**

| | |
|---|---|
| கசகசா | காட்டுக்கறம்பு |
| தாளீசபத்திரி | கறிச்சாணை |
| வால்மிளகு | புளிய நாலை |
| கோட்டம் | நாவ நாலை |
| சாதிலிங்கம் | |
| கஞ்சா | |

**காலம் :**

இல்லை

குறிப்பு :

இதில், அங்காயி மாத்திரை, அண்ட வாயுவு, பூனீறுசயம், மந்தாரகாசம், மேக சஞ்சீவி . ய், மூலரோகத்துக்கு ரசமணி, சுண்ண ம்புச்சீலை சுத்தி தாம்பூராதி மாத்திரை, சலக் கிராணிக் , நெல்லிக்காய் லேகியம், கண்ணுக்கு, சூடன் வைப்பு முதலான பல தலைப்புகள் உள்ளன.

* * *

வரிசை எண் : 2826 சுவடி எண் : 1 9

## இராமதேவர் — 216

ஏடுகள் : 84 கி. எண்ணிக்கை : 1500 அளவு : 25 × 3 செ மீ.
பக்கத்திற்கு : 5—6 வரிகள் ஆசிரியர் : இராமதேவர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஆதியந்த மெய்நிறைந்த சோதி பாதம்
அகண்டபரி பூரணந்தி னறிவைக் கூட்டி
பாதியாய் முப்பொருளு மூன்று மொன்றாய்
பரவெளியாய் நின்றபரா பரையின் பாதம்

முடிவு :

நாட்டினே னேதென்றால் மைந்தா கேளு
நாதாக்க ளெல்லாருங் கூடி யேதான்
வீட்டிமையாய் அவரவர்தான் சொன்னா ரப்பா
விகுவாக யென்னூலில் வெளியாய்ச் சொன்னேன்
பாட்டிலே சொன்னதென் றெண்ணி நீயும்
பலிக்குமோ பலிக்காதோ யென்றெண் ணாதே
தீட்டியதோர் நவமணிகள் கோத்தாற் போல
செப்பினேன் சித்தரெல்லாந் தியங்கி னாரே ! — 212

காலம் :

இல்லை

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 324-e/D 640 போன்றது இதில், ஞானம் சவுக்காரம், பூனீறு, அயசெந்தூரம், சாறச் சுண்ணம், காந்த சத்துக்கிண்ணம், கல்லுப்புத்தயிலம், குருவழலை முதலான பல தலைப்புகள் உள்ளன.



வரிசை எண் : 2827 சுவடி எண் : 1 90

## இராமதேவர் அஷ்ட கர்மம்

ஏடுகள் : 70 கி. எண்ணிக்கை : 1500 அளவு : 17×3 செ.மீ.
பக்கத்திற்கு : 7-8 வரிகள் ஆசிரியர் : இராமதேவர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

வாலை குரு

பூரணத்தி லுணர்ந்தோர்கள் பாதம் போற்றி
பொதிகைவரை மூலவர்க்கும் பெரியோர் பாதம்
சீரணத்த நந்தீசர் சட்டைமுனி நாதர்
செய்யபுண் ணாக்கீசர் கோரக்க னாதர்
ஆரணக்கண ............ சின்மயமாம் போகர்
அகஸ்தியர்வாழ் திருமூலர் சுந்தரா னந்தர்
ஏரணக்கண் கமலமுனி ரோமரிஷி சூதர்
யிடைக்காடர் கருவூரார் உன்னோ ரையா ! — 1

முடிவு :

வில்வக்கா யிடிச்சுச் சூரணம் பண்ணி
கடுக்காய் தானிக்காய் நெல்லிமுள்ளி
யிடிச்சு தண்ணீரிலே ஊரப் போட்டு
பானையில் ஊரப்போட்டு பாதான......—......

காலம் :

இல்லை

குறிப்பு :

முதல் ஏட்டில் தலைப்பு எழுதப்படவில்லை 2-வது ஏட்டில் தலைப்பு தரப் பட்டுள்ளது அது, 'ராமதேவர் அஷ்ட கற்மம் ஆன்பதில் செய்பாக அட்டவணை-கருவில் செயநீர்' என்றுளது. இதில் ஆணிப் பூவுக்கு, தலைவலிக்கு, மண்டையிடிக்கு, புண்ணுக்கு முதலான பல தலைப்புகள் உள்ளன.

★ ★ ★ ★

வரிசை எண் : 2828

சுவடி எண் : 1491

## வைத்திய அகராதி

ஏடுகள் : 14 கி. எண்ணிக்கை : 500 அளவு : 37×3½ செ.மீ.
பக்கத்திற்கு : 8-9 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : அகராதி
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

அ...தம் — கடுக்காய்
அறிதகி — கடுக்காய்
அட்டியன் — கடுக்காய்
அனந்தன் — கடுக்காய்
அம்பலத்தி — தானிக்காய்
அகதிகோற — கோரோசினை
அருட்டம் — மிளகு

முடிவு :

மராய — கோடகசாலை
மாவிலந்த — விடத்தா(ரை)
மாமுடி — நெட்டி
மாத்திப்பொத்தி — (கொள்ளி) ஞ்சி
மானாகவித்து — புன்னை விரை
மாலதி — சிறு செண்பகம்
மாசு — தேமா
மாதுளம் — மாதளை
மாலூறம் - வில்வம்

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், முழுமையாக இல்லை எனினும், நான்கு பத்திகளாக எழுதப்பட்டுள்ள மூலிகை அகராதி எனும் இது பதிப்புக்கு உரியது.

* * *

வரிசை எண் : 2829 சுவடி எண் : 1492

## வாசுதேவ என்று வழங்குகிற மணனி விவேகசாரம்

ஏடுகள் : 17 கி. எண்ணிக்கை : 1000 அளவு : 30×4செ.மீ
பக்கத்திற்கு : 6 - 13 வரிகள் ஆசிரியர் : வாசுதேவேந்திர சுவாமிகள்
பொருள் : வேதாந்தம் நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

அத்தியாரோப

அபவாதப் பிரகரணம்

அன்னை யாகியு மத்தனு மாகியு
மென்னை யாளு மெழிற்குரு வாகியு
மன்னு மாபதி யீன்ற மதகயத்
தன்னை யேத்தியின் னூலினைச் சாற்றுவாம் — 1

\+ \+ \+ \+ \+ \+

ஸ்ரீ குருப்பியோ நமா

நூல்

அத்தியாரோப அவவாதத்தினாலேயே பிரமத்தை
யறிய வேண்டுமென்று சாஷ்த்திரங்களிலே
சொல்லுகிறபடியினாலே அதில் அத்தியாரோபத்தை
முன் சொல்லுகிறோம்
அந்த அத்தியாரோபமாவ தேதென்றால்
ஒரு வஸ்த்துவினிடத்தில் அன்னிய
வஸ்த்துவாய்த் தோன்றுகிறது.

முடிவு :

சேர்ந்திட்டேன் அக்கினியில் சொக்கி வாழ்ந்தேன்
தீர்ந்ததுக ளானதையுந் திடமாய்க் கண்டேன்
தாள்ந்திட்டேன் அப்புறமும் மேலே சென்றேன்
தமற்திறக்கும் வாசலுட தயவும் பெற்றேன்
வாள்ந்திட்டேன் சுத்தசிலந் தான கொண்டேன்
வாய்வான யோகத்தை வளியாய்க் கொண்டேன்
ஆள்ந்திட்ட அச்சுடரின் அளகு தன்னை
ஆராலுஞ் சொல்லரிது அய்யா பாரே ! — 190

பாரெண்டு யென்குருவே யிப்..............

........... ........... ................

காலம் :

இல்லை

குறிப்பு :

இது, எமது இலக்கியச் சுவடி எண் 993-a/D 1788 போன்றது. அதற்கும் இதற்கும் வேறுபாடு மிகுந்து காணப்படுகிறது. இது, 'வாசுதேவ மனனம்' என்ற பெயரால் வழங்குவது உண்டு. இதன் 7-வது ஏட்டில் 'பஞ்சபூதம்' என்ற ஒரு தலைப்பு மட்டும் உள்ளது. மிக அதிகமான வரிகள் எழுதிய ஏடுகளில் இதுவும் ஒன்று.



வரிசை எண் : 2830 சுவடி எண் : 1493

## அகத்திய மாமுனிவர் அருளிச்செய்த அபிராமி மெய்ஞ்ஞான நாடிச் சுருக்கம்

| | | |
|---|---|---|
| ஏடுகள் 14 | கி எண்ணிக்கை : 200 | அளவு : 34×2½ செ மீ |
| பக்கத்திற்கு : 4 வரிகள் | ஆசிரியர் : அகத்தியர் | பொருள் : நாடிசாத்திரம் |
| நிலைமை : நல்ல நிலை | முழுமை முற்றுமுளது | எழுத்து : தமிழ் |

தொடக்கம் :

அபிராமி

காப்பு

ஆதிபரா பரமாகி யகண்ட மான
அமுதலிங்க ரருளாலே யந்நாள் வாமப்

பாதியிடத் தபிராமி வல்லி யாத்தாள்
பரைமனோன் மணிக்குரைத்த ஞான நாடி
பூதலத்தோர் நாடிவகை நன்றாய்த் தேர்ந்து
பூதவகை நோய்வகை ளுளவிற் காண
நீதலத்திற் சொல்லெனவே யெனக்குச் சொன்னாள்
நேர்ந்துரைப்பே னாடியது மூலந் தானே ! — 1

முடிவு :

ஓமென்ற மலக்கட்டைக் கழிய வைத்தா
லுடலிலுள்ள வாதையெல்லா மோடிப் போச்சு
தாமென்ற சிறுநீரைத் தெளிய வைத்தால்
சடத்திலுள்ள வேகமெல்லாந் தணிந்து போச்சு
கூமென்ற வுமிழ்நீரை முரிய வைத்தால்
கூட்டிலுள்ள பகையெல்லாங் குலைந்து போச்சு
கோமென்ற பறவைமூன்றுங் களங்க மற்றால்
கொல்லவந்த காலனையும் வெல்ல லாமே ! — 27

நாடிமுற்றும்

கடவுடுணை

காலம் :

இல்லை

குறிப்பு :

இச்சுவடியில், இரட்டைக் கொம்புகளும், புள்ளிகளும் உள்ளதால் இது அண்மைக் காலத்தில் எழுதிய சுவடியாகக் கருதப்படுகிறது. நாடி இலக்கணத்தினை நன்றாக நவில்கிறது.

★ ★ ★

வரிசை எண் : 2831 சுவடி எண் 1494

## வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 1.5 கி. எண்ணிக்கை : 1200 அளவு : 25 × 2½ செ.மீ
பக்கத்திற்கு : 4-6 வரிகள் ஆசிரியர் : பலர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

காதுரெயாச்சலுக்கு தயிலம்

| | |
|---|---|
| கொடிவேலி வேர் | நல்லயெண்ணை |
| பெட்டிக் கொட்டை | இவையெல்லாம் |
| கொப்பு அறசி | தண்ணீற் விட்டு |
| வெல்ல மொலகு | அரைச்சி காச்சி |
| வேப்ப யெண்ணை | தலையில் தேச்சி காதில் அடைக்கவும் |

முடிவு :

ஓமென்ற பிரணவமே பாதி வஸ்த்து
உலகமெல்லாந் தான் நிறைந்த ஓ சத்தி தான்
காமென்ற சத்தியடா யெங்குந் தானாய்
சதாகோடி மந்திரத்துக் குயிராய் நின்று
ஆமென்று ஆடினதும் மோங்காரந் தாண்டி
முடிவாய் நின்றதுவும்

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், மாட்டுக்கு வெக்கை, கழிச்சலுக்கு லேகியம், மாட்டு ரெணங்களுக்கு பிளாஸ்த்திரி, வங்கவெட்டை, சகல ரணங்களுக்கும் களிம்பு, அமுர்த லேகியம், விஷ பேதிக்கும் கிராணிக்கும், விரோதிகளுக்கு, சஞ்சீவிக் குழம்பு, தங்கபஷ்பம், தாதுபுஷ்டி லேகியம், சித்தர் பாடல், தாதுவிர்த்திக்கு ஊர்க்குருவி லேகியம், துரிசுச்சுண்ணம், சுரங்களுக்கு குளிகை முதலான பல தலைப்புகள் உள்ளன.

* * *

வரிசை எண் : 2832 சுவடி எண் : 1495

## வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 110 ஏ. எண்ணிக்கை : 3500 அளவு : 33×3 செ.மீ.
பக்கத்திற்கு : 6—9 வரிகள் ஆசிரியர் : பலர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

வியாதி குண மறியவும்

வியாதிக்காரன் சாப்பிட்டு சீரணத்துக்கு
வந்தபிறகு அவன் நீர் பிடித்து அதிலே
நல்லெண்ணை ஒருதுளி விட்டுப் பார்த்தால்
அழிந்திப் போனால்........... வான்
அழுந்தாமல் மிதந்தால் பிழைப்பான்

முடிவு :

சுரசாஸ்த்திரம்

திருவாதிரையில் சுரந் தோன்றினால் ஆறா நாளில் கொல்லும்
புனர்பூசத்தில் தோன்றினால் பதிமூணு நாளையில் விடும்
பூசத்தில் ரெண்டானாள் விடாதாகில் எட்டானாள் விடும்
ஆயிலியத்தில்க் கொல்லும்
மகத்தில் ஏழானாள் விடாதாகில் பத்தொன்பதில் விடும்.

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், அரவத்து நாலடிச்சிந்து - சாட்சினாத சுவாமி பேரில், சாட்சிநாத சுவாமி பேரில் துதி, லிங்க வேதை, பூரபஸ்பம், லிங்க வெள்ளை, தாளக பஸ்பம், விஷத்துக்கு, அகஸ்த்தியர் சிந்தாமணி, மருந்து சுத்தி வகை, மருந்து சுத்தி சிந்தாமணி, கோடாசூளி உண்டை கோரோசினை குளிகை, சன்னிவாத வயிரவன், சயரோகத்துக்கு கண்டங்கத்திரி நெய் முதலான பல தலைப்புகள் உள்ளன.



வரிசை எண் : 2833 சுவடி எண் : 1496-a

## அகத்தியர் வகாரம் — 200

ஏடுகள் : 32 கி. எண்ணிக்கை : 1500 அளவு : 27×4 செ.மீ.
பக்கத்திற்கு : 8-11 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் ;

ஹரிஓம் நன்றாக

ஆதிஅரன் மணக்கோலம் செய்யும் நாளில்
　　ஆதிமுதல் தேவியுட கூட்ட மாச்சு
வேதியரும் மாயோனும் தானாய் நின்று
　　விமலனார் விசுமனுக்கு வரத்தை யீய்ந்தார்
நீதிபெறச் சாருதியாந் தெட்சணாயர்
　　நிலையான சார்பொதிகை கிரியில் சென்றார்
ஆதியொரு காரணத்தால் பரைதா னி ற
　　ஆடகந்தா னம்பலமா மருளைப் பாரே ! — 1

முடிவு :

யிந்தாலே யிரவிதனைக் கட்ட வேணும்
　　இத்ததொரு வண்டத்தி லேற வேணும்
வந்தாலே கறுரண்டு மறிய வேணும்
　　மகத்தான குக்குடத்தை யறிய வேணும்
சந்திரனா லிரவி யொன்றாய் முடிக்க வேணும்
　　சராசரத்தி னீர்தனையே காண வேணுங்
கொந்தான பூரணமே சார மாகுங்
　　கூடுகின்ற ரவிகோடா கோடி முத்தே ! — 203

சர்க்குரு பாதந்துணையாக யிருக்க வேண்டியது.

சரஸ்பதி துணை

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில் தலைப்பு எழுதப்படவில்லை. முதலேட்டின் முன்னுள்ள ஏட்டில் 'பாடல்சேதி யட்டவணை விபரம்,என்று எழுதப்பட்டுள்ளதில் ஒன்று முதல் முப்பத்திரண்டு வரைக்கும் 'அகஸ்த்தியர் வகாரம்—200, என்றுளது கொண்டு தலைப்பு கொடுக்கப்பட்டது.

இதில், அண்டச்சுண்ணம், வெள்ளைக்கட்டு, கட்டுதிராவகம், மெழுகு திராவகம், செந்தூர திராவகம், கல்வாளைச்சுன்னம், ரசகற்பம், விழலைச் சுண்ணம், துருசுச் சுண்ணம், சிப்பிச் சுண்ணம், சாரணை, பலச்சுண்ணக்குகை, நரிக்கட்டு, சீனாக்காரக் கட்டு, செயனீர், மெழுகுத்தயிலம், கெந்திமெழுகு, பாஷாணக்கட்டு, வழலைச்சுண்ணம், பூமினாதப் பெயர், கல்லுப்புப்பேர், தேசினீர், கோசபீசம், வெள்ளைக்கட்டு, மரியாதை நீதி, வல்லாரை கற்பம், கறுநெல்லிகற்பம், மற்றும் பல தலைப்புகள் உள்ளன.

இச்சுவடியின் தொடக்கத்தில் 'பாடல்சேதியட்டவணை' எழுதிய ஏடு ஒன்றும், ஹரி ஓம். 'கஞ்சா' என்ற தலைப்பு எழுதி, அதில் மருத்துவமும் ஒரு பக்கமே எழுதிய ஏடு ஒன்றும், ஆக இரண்டு ஏடுகள் உள்ளன,

★ ★ ★

வரிசை எண் : 2834 சுவடி எண் : 149?-b

## கொங்கண நாயனார் கடைக்காண்ட சூத்திரம் தீட்சாவிதி

ஏடுகள் : 9½(33 41½) கி. எண்ணிக்கை : 500 அளவு : 27×4 செ மீ.
பக்கந்திற்கு : 8—10 வரிகள் ஆசிரியர் : கொங்கணநாயனார் பொருள் : மருத்துவம்
நிலைமை : சுமரானநிலை முழுமை : முற்றுமுளாது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

சிவமயம்

ஆதியந்தங் கடந்துநின்ற பூரணந்தான் போற்றி
அம்மனொடு மூலத்திற் கெனேசன் போற்றி
பாதியந்த மலர்கடந்த மூலர் காப்புப்
பரமாகி யடியிருந்த போகர் காப்பு
சோதியாய் நின்றதொரு பெரியோர் காப்பு
துரியவெளிக் குள்ளான ரிஷிகள் காப்பு
நீதிபெற அறுபதுக்குள் தீட்சை மார்க்கம்
நெறியாக வுள்ளபடி நிலைக்கின் றேனே ! — 1

முடிவு :

கள்ளமென்றுந் தெரியாதே தீட்சை மார்க்கங்
கயிலாசத் தேகுடி யிருக்கப் பண்ணும
வெள்ளேனென்ற மனங்கண்டால் வாள்வா ரன்பாய்வேறு
விளாபோலே திரிந்தா லேது மில்லை
உள்ளபடி முப்பாழுக் கப்பால் நின்ற
ஒகோகோ சுருதிமுடிந் திட்ட வாறு
வள்ளலே பூரணத்தின் தீட்சை சொன்னேன்
வளமான கனியொன்றாய்க் கனிந்த முற்றே ! — 61

கடைக்காண்ட சூத்திரம் முற்றும்

வாணியே நம.

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில் பஞ்சபூத...ச்சரக்கு, சவுக்கார வைப்பு, அடிவழலை, முடிவழலை, சிவதீட்சை, சத்தி தீட்சை, ஆகிய தலைப்புகள் உள்ளன.



வரிசை எண் : 2830 சுவடி எண் : 1496-С

## கொங்கண நாயகனா ரருளிச் செய்த நடுக்காண்ட சூத்திரம் — 53

ஏடுகள் : 9½ (41½-51) கி. எண்ணிக்கை : 500 அளவு : 27×4 செ.மீ.
பக்கத்திற்கு : 9-11 வரிகள் ஆசிரியர் : கொங்கணநாயனார் பொருள் : மருத்துவம்
நிலைமை : சுமாரான நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

பாவான மூன்றுகண்ட மன்னூறு முத்தும்
பாரப்பா சீவகளை சூத்திரத்தில் சொல்வேன்
மாவாக யெவ்வுயிற்கும் பிறம்புள் ளாக
மன்னிநின்ற பூரணமே காப்புக் காப்பு
காவான மனமுறைத்தால் ஆசானைப் போற்றி
காத்திருக்க சூஸ்த்திரத்தைக் கைமீ லீவார்
தாவான யோகமுதல் ஞான சிற்றி
தரணிதனில் வாதசிற்றி பலிக்கும் பாரே ! — 1

முடிவு :

பக்தியிந்த சூஸ்த்திறத்தைப் பார்த்துக் கண்டு
பலபலவாஞ் சாஷ்த்திரத்தைப் பாறு பாறு
அத்தியிந்த சூஸ்த்திரம்பேர் சட்டைமுனி அய்யாநூலு
மல்லாதொரு நூலில்லை யளந்து பாரு
முத்துயென்ப தேதுநீ லவணத் தாலே
முன்பின்னுந் தீயர் பெற்ற தீட்சை மார்க்கம்

சத்தியிந்த வழலையப்பா யிதனை விட்டார்
தலை கெட்ட வாதமது காணு முத்தே ! — 53

கொங்கணர்சாமி நாயனார் சூத்திர

முற்றும்

சற்குரு பாதந் துணையாக வேண்டியது.

**காலம் :**

இல்லை

குறிப்பு :

இது, 42-ஆம் ஏட்டின் பின்புறமிருந்து தொடங்குகிறது. தலைப்பு 42-ஆம் ஏட்டின் பின்பகுதியில் உள்ளது.

இதில், கற்பூர உப்பு, துரிசுச் சுண்ணம், ஆதிகுரு, வங்கம், நீறுபோற் குரு, இது 2-ஆம் வாதத்துக்காதி, வெள்ளிகுரு, கூடுங்குரு, சூத வெண்ணை உருக்கு முறை, ரசித குரு ஆகிய தலைப்புகள் உள்ளன.

★ ★ ★

வரிசை எண் 2836 சுவடி எண்: 1496-d

## போகனாயனா ரருளிய ரெண்டாங் காண்டம்

ஏடுகள் : 17½ (52-68½) கி. எண்ணிக்கை : 1000 அளவு : 27×4 செ மீ.
பக்கத்திற்கு : 9-11 வரிகள் ஆசிரியர் : போகனாயனார் பொருள் : மருத்துவம்
நிலைமை : சுமாரான நிலை, பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

**தொடக்கம்**

இரண்டான ஆயிரத்தை விரித்துச் சொல்வேன்
ஈசர்பயின் றெடுத்தகரி முகன்காப் பாகும்
திரண்டான சிவ.........ய பதத்தைப் போற்றி
திரிபுரசுந் தரிபாதம் சிரசில் வைத்து
கரண்டான காலாங்கி அய்யர்பதம் போற்றி
கடாவு...... ......மூலகுரு பாதம் போற்றி
பரண்டான பதஞ்சலியாம் தெட்சணா மூர்த்தி
பாதமெந்தன் சிரசில்வைத்துப் பாடு ரேனே ! — 1

**முடிவு :**

மதிரவியை ஏரினத்தில் காட்டிப் பின்பு
மயிர்பிடித்து நீயுமந்த படிபோ டெண்ணு
விதிதவறில் வேதைதவ ராது என்று
மென்மையாம் லிங்கத்தின் குறுச்சத் தீவாய்
சதிபண்ணும் வாதியைநீ சேத்தி டாதே
சமரசமாம் வாதியொடு தற்கித் தாடு
ஒதிபெறுத்துத் தூணாகா வாறு போல
உலுத்தருக்கும் இம்முறையை உறைக்கா காதே ! — 120

சற்குரு பாதந் துணையாக வேண்டியது

சரஸ்பதி அம்மன் கிறுபை உண்டாக வேண்டியது

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், வெடியுப்புச் செயநீர், லோகச் சுண்ணம், திருவங்கச் சுண்ணம், தாம்புரச் சுண்ணம், பஞ்சலோக வெடியுப்புச் சுண்ணம், வெங்காரச் செயநீர், பூரச் செயநீர், சவுக்காரச் சுண்ணச் செயநீர், கற்பூரச் சுண் ணம், சவுக்காரச் செயநீர், பூனீருப்புச் சுண்ணம், கல்லுப்புச் சுண்ணம், படிகி சுண்ணம், பாஷாணச் சுண்ணம், தாளகச் சுண்ணம், லிங்கம், வீரம், கருவங்கச் செயனீர், சவுக்கார குரு, சாரம் சுத்தி, திராவகம், இந்துப்பு வைப்பு, பொட்டிலுப்பு வைப்பு, பொட்டிலுப்புக் கட்டு, இரும்புருக்க முதலான தலைப்புகள் உள்ளன.



**வரிசை எண் : 2837** **சுவடி எண் : 1496-c**

## வாசமுனி சூத்திரம் — 71

ஏடுகள் : 5½ (68½-74) கி. எண்ணிக்கை : 300 அளவு : 27×4 செ.மீ.
பக்கத்திற்கு : 7-11 வரிகள் ஆசிரியர் : வாசமுனி பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஆதியு மந்தமு மனுபோக வாய்வினில்
மாதொறு பெண்பிள்ளை மாசத்தி யாகினள்
நீதிபரா பறைநேமி யோன்றங்கை யாஞ்
சோதியில் வந்த சுடரொளி னாதமே! — 1

முடிவு :

ஒப்பாறு மில்லை ஒளியாய்க் குருநந்தி
செப்பிய வாதந் திறந்தா றெனவேதான்
அப்பனே வாதஞ் சத்தியரு ளாலே
முப்பு வழலை சவுக்கார முற்றுமே! — 71

வாச முனியார் வாத சூத்திரம்

எழுதி நிறைந்தது

முற்றும்

குமாரசாமி துணையுண்டாகவும்

சரஸ்வதி அம்மன் துணை

தேவி சகாயம்

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், முப்புச் சுண்ணம் என்ற ஒரே தலைப்பு காணப்படுகிறது.

★ ★ ★

வரிசை எண் : 2838 சுவடி எண் : 1496-f

## அகத்தியர் எண்ணூற்றுத் திரட்டு

ஏடுகள் : 67 கி. எண்ணிக்கை : 3500 அளவு : 27×4 செ.மீ
பக்கத்திற்கு : 10-11 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

வாளைத் தாவிய போதிகை மகத்தான
ரிஷியுடை வாக்கு நேர்மை
பானைத் தாவிய பூ...... பரிவான
சிவயோகப் பண்பேரர் கேளீர்

முடிவு :

வாறான வாலைரச முப்பா......
......ந்திரா சொல்லுகிறேன் நன்றாய்க் கேளு
தாறான பீங்கானில் வால்ரசம் விட்டுத்
திராவுகத்தை .........லே வைப்பாய்
கூறான தினம்பத்து வெயிலில் வைக்கக்
குமுறியது உப்பாகும் வாலைரச யுப்பு
............ ............... வாலைரச வுப்பு
வெகுசுறுக்கு வெகுசுறுக்கு விரைந்து பாரே ! — 473

காலம் :

இல்லை

குறிப்பு :

இது எமது வடி எண் 426-1/D-885 அகத்தியர் திராவகம் 800 போன்றது.

இதில் கெந்தக சத்து, திருமி சித்தர், அனுப்பானம், பத்தியம், குளிகைபுடம், கிறாவணம் குளம்பு, குடோரி, குடோரிப் தங்கம், சித்தர் சூது, குருசீஷன், நாற்பத்துமுக் கோணம், சிதம்பர சக்கரம், அட்டாங்கம், சம்மேளனம், திராவகம், சாரக்கட்டு, செந்தூரம், பூனாகச்சத்து, அயகற்பம், திமிளை சத்து, வங்கச்குறு முதலான பல தலைப்புகள் உள்ளன.



வரிசை எண் : 2839 சுவடி எண் : 1497

## பிள்ளைப்பிணி

ஏடுகள் : 83 (1-10, 21-13) கிர. எண்ணிக்கை : 500 அளவு : 28 × 3 செ.மீ. பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம் நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

குருவேதுணை

பிள்ளைப்பிணி வாகடம்

பெண்பிள்ளை கெற்பிணிக்கு

சீரான பராபரத்தில் பரமாய் நின்று
திரிவுவுளந் தாதியவை யாளா வென்று
(பேரான) வஸ்துவெனும் விமலர் பாதம்
பேணியே நமஸ்கரித்துப் பிரிய மாக
நேரான ப......சாத் திரத்தைப் பாட
நினைந்துமுன்னூல் விதித்தபடி நேர்மை யோடு
......ன்ன மதிமாயைத் தொழிலை நீக்கி
சொல்லுறே னுள்ளபடி சொல்லு றேனே !

முடிவு :

பிள்ளைத் தோசத்துக்கு மருந்து
பிள்ளைக்கு கலசம் சொரிய முறை

......யில் நீரே சொரிய நிசமானால்
நீரில்போட நீ சேளு கா......
வளரும். பிடிதானும் யோணமா
மேனி கீள்வாயும் சதிரே சிறு
புகை - மருந்து

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், இடையில் 10 ஏடுகள் இல்லை, இதில், சில ஏடுகள் புதிதாக எழுதிக் கோர்க்கப்பட்ட புது ஏடுகளாகக் காணப்படுகின்றன.

இதில், கெற்பக்கோள், மருந்து, புகை காட்ட, பிள்ளைப்பிணி, கணபதி பூசிக்க முறை, சக்கரமும் பெலிகொடுக்க மந்திரமும், கும்பனா சொரிய சக்கரம், பால் மார்க்கம் பால் மாந்தை குணம், பேர்மாந்தத்துக்கு எருக்கம் நெய், விசமாந்தத்துக்கு நெய், கிராணிகளுக்கு குளிகை மற்றும் பல தலைப்புகள் உள்ளன.



வரிசை எண் : 2840 சுவடி எண் : 1.9[illegible]-a

# வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 13 (2-4) கி. எண்ணிக்கை : 150 அளவு : $13 \times 2\frac{1}{2}$ செ மீ.
பக்கத்திற்கு : 6–7 வரிகள் ஆசிரியர் : பலர் பொருள் : மருத்துவம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

சுறமாரித் தயலம்

அளிஞ்சி விரை — புங்க விரை
தான்னிக்காய் — புன்னை விரை
கடுக்காய் — கார்போக அரிசி
ஆக யிவளவும் சரியிடை
பாண்டத்திலிட்டு சிருநீர்
விட்டு — யிருவதுநாள்

முடிவு :

வயத்துக் கடுப்புக்கு

கசகசா யிலவங்கப்பட்டை
மாதாழந்தோடு எருமைத் தயிரில்
அரைத்து மடி தயிரில் கலந்து கொண்டு
கோணிக்கரி — சதைக்கரியாக எடுத்து
அதில் யெருமை வெண்ணை போட்டு
வேகவைத்து — முன் கலந்த மருந்தைக்
கூட விட்டு வேக வைத்து குடுக்க
வயத்து உழச்சல் வயத்துக் கடுப்பு
சகலமும் தீரும்.

வேறு : அகஸ்தியர் பதினாறிலிருக்கிறது.

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், கனுசை சூலைக்கு காந்த ரசவில்லை, வலிப்புக்கு, நீர்முள்ளித் தயிலம், விக்கல் சத்தி பாகத்துக்கு, மண்டையிடி முகவாதத்துக்கு, தீச்சுட்ட புண்ணுக்கு, வயற்று உளைசல், குருமம், பாண்டு, கிருமிக்கு, முழங்கால் வாதத்துக்கு, குட்டம் பதினெட்டு வகைக்கும், சூதக வாய்வு, வண்டு கடிக்கு, வயத்துக் கடுப்புக்கு ஆகிய தலைப்புகள் உள்ளன.

★ ★ ★

வரிசை எண் : 2841 சுவடி எண் : 1498-b

## அகத்தியர் — 16

ஏடுகள் : 8 (5-22) கி. எண்ணிக்கை : 100 அளவு : 13 × 2½ செ.மீ.
பக்கத்திற்கு : 6-7 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : சுமாரானநிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரிஓம் நன்றாக குருவாழ்க
குருவே துணை

அரிதாரம் பிரிதிவாகும்
சட்டிஊறம் அற்ப்புவாகும்
கெவிரி தேய்வாகும்
வெள்ளை வாய்வாகும்
லிங்கம் ஆகாசமாகும்

முடிவு

வேறு
சுறமாத்திரை
குளிகை

வெள்ளைப் பாஷாணத்தைச் சுத்தி செய்து
மிளகு சரியிடை சேர்த்து அரைத்து
அவரிசார் விட்டரைத்து ஒருசாமம்
அரைத்து மிளகு பிரமாணம்
உண்டை செய்து வைத்துக் கொண்டு

சுக்குக் கிசாயத்தில் 3 நாளைக்கி காலமே
ஒரு குளிகை ஒரைத்துக் குடுக்கவும்
6 நாள் தண்ணீர் விடவும்

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், கெவிரிலைகை, வெள்ளைநாவி வகை, சாதிலிங்க வகை வயத்துவலி, பாண்டு வகைக்கு, சாதிலிங்க செந்தூரம், தாளகப்புகை, குமட்டிவேர் நசியம், இருமலுக்கு சுரமாத்திரை குளிகை ஆகியன உள்ளன'

இது, அகத்தியர் —16-ன் உரைநடைபோலும்

★ ★ ★

வரிசை எண் : 2842 சுவடி எண் : 1498-c

## பெண்கள் வைத்தியம்

ஏடுகள் : 31 கி. எண்ணிக்கை : 300 அளவு : 13×2½ செ.மீ.
பக்கத்திற்கு : 5-6 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்
நிலைமை சுமாரானது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

பெண்களுக்கு கெற்ப முண்டாக

பெண்களுக்கு புணற்வேளை தலை நொந்தால்
கருக்குழியில் பாசம் பற்றி யிருக்கும்
இதற்கு மருந்து செய்கிற விபரம் :-
கோளிப்பித்து யெடுத்து பருத்திவிரைப் பருப்பும்
சேர்த்து அரைத்து முளிகிக் குளித்தனாள் முதல்
3-நாளைக்கி ஷெ அரைத்த மருந்தை யோனிக்குள் பூசி
புருசனைப் புணரச் சொன்னால் ஷெ பாசம் அற்றுப்
புள்ளை யுண்டாகும்.

முடிவு :

தாதுக்கு

| | |
|---|---|
| நிலவேம்பு | சுக்கு மிளகு |
| பற்படகம் | அதிமதிரம் |
| சீந்திக்கொடி | சிறுதேக்கு |
| செம்முள்ளி வேர் | கொத்தமல்லி |
| பேய்ப்புடல் | இதுவெல்லாம் |
| நெல்லியீக்கு | இடித்து இரண்டுபடி |
| கோரைக் கிழங்கு | |

தண்ணீரிலே கிசாயம் மிட்டு வத்தினவுடனே
மாகாணி கிசாயம் மூன்றுவேளை குடிக்கவும்

இதற்கு அனுபானம் - குருந்தட்டிவேர்
நற்சிரகம் கிசாயம் போட்டுக் குடிக்க அத்திரம் நீங்கும்

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், மூணாஞ் சூலைக்கி, நாலாஞ் சூலைக்கி, அஞ்சாஞ் சூலைக்கி, ஆறாஞ் சூலைக்கி, ஏழாஞ் சூலைக்கி, கற்ம சாந்திக்கு, பூரணசந்திர மாத்திரை உள் மூலத்துக்கு, மூலத்திற்கு, உள்மூலம், சலமூலம், ரத்தமூலத்துக்கு, பேதி, கெற்பத்துக்கு, நேர்வாள சுத்தி, எளைப்புக்கு எண்ணெய், சன்னிக்கி, மாந்த எண்ணை பாரிசவாயுவுக்கு முதலான தலைப்புகள் உள்ளன.

★ ★ ★

வரிசை எண் : 2843 சுவடி எண் : 1499-a

## (அகத்தியர்) ரசவாதம் ஆயிரத்து இருநூறு

ஏடுகள் : 23 கி. எண்ணிக்கை : 500 அளவு : 25×4 செ.மீ.
பக்கத்திற்கு : 6-8 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம்

ஆம்மென்ற பூரணா னந்த மேவி
ஆதியந்தஞ் சற்குருவின் அறிவாய் நின்று
ஓமென்ற நாதவிந்து மதிலி டாக
உத்துநின்ற திரோதாயி மவுன வாலை
நாமென்ற மகாமேரு மிரவின் கூர
நடனவொலி யகண்டமுத படர மாக
வேமென்ற தந்திபதங் கருணை கூர்ந்து
விளம்பினேன் விமலரடிக் காப்புத் தானே ! — 1

முடிவு :

மருந்துவைத்த செந்தூரப் பற்பங் கட்டு
வகைவிபரங் காட்டாத்திப் பூத்தா ளிட்டு
இருந்துவைத்த செந்நீரில்த் திவலை தாக்கி
எந்தெந்த பாயமெல்லாஞ் சிவக்கும் பாரு
குருந்தவைத்த மால்விடையா ரெனக்குச் சொன்ன
கோடிசெப்பில்ச் செந்தூரங் கூட்டி னேன்யான்
திருந்தயகு யோகதிரா செயநீர் வேணும்
செய்தொழில்கள் சித்திக்கப் பொடித்தொட் டேறே ! — 58

யேறயிந்தத் திருபோகஞ் சொல்லக் கேளு
யேறழிஞ்சி வித்துடனே யெட்டிக் கொட்டை
தூறதிலே ஆளாக்கிச் சூரை வேந்த தூள் .........

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், தலைப்புப் பகுதி எலிகடித்துள்ளதால் தலைப்பு சரியாகத் தெரியவில்லை. காப்பு 2-ஆம் செய்யுளில் 'ரசவாத மாற்கஞ் சொல்ல' என்றதனால் ரசவாதம் - 1200 எனப்பட்டது. 'ஆயிரத்து = றநூறு' தெரிகிறது.

இதில், கண்கட்டு மை, வாயில் போட குளிகை, பிசாசு ஆட்ட வினோதம், மனிதர் நாய்போல் குலைக்க, வித்தையாட, அஞ்சனம், வித்தையாட, தீரா போகம், ஆகிய தலைப்புகள் உள்ளன,



வரிசை எண் : 2844 சுவடி எண் : 1499-b

## (அகத்தியர்) சாலம் ரெண்டாங் காண்டம்

ஏடுகள் : 48 கி. எண்ணிக்கை : 800 அளவு : 25×4 செ.மீ.
பக்கத்திற்கு : 6-7 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

சித்திக்கு தேவரமு துண்ட வாரி
சிகவசிய
முத்திக்கு மூலபதம் போத்தி முன்னூரை
போனவழி
சத்திக்கும் சாலம்யிரு நூறும் பாலும்ந்
தானுரைக்க
அத்திகரி யுரிக்கொண்டோன் ரண்டாம் பாதம்
ஆதிவடித்தே ! — 1

**முடிவு :**

பாறாதே சிலர்க்கடுமை செய்தி டாதே
பா...... ......காமி பாதந் தானே
கூறாதே யாவருக்குங் ......... .........தை
கொல்லாதே சீவசெந்து நீயெண் டெண்ணு
சேறா...... ......கொழுப்பு யீடு வாடை
செய்யாதே
பெத்தபிள்ளை கருவை நாளும்
யேறாதே ரெண்டாங்காண் டத்தை விட்டு
யெறியாதே யிந்திரசால மிருநூறு முத்தே !

சாலம் ரெண்டாங் காண்டம்

முற்றிற்று

மனோன்மணியம்பாள் துணை

இவை யிந்த புஷ்த்தகம் செங்கல் படுத்தான் காடு
பிறமவேளான் மகன் கி, அருணாசலம் புஷ்த்தகம்

**காலம் :**

இல்லை

குறிப்பு :

இதில், வசியமை, மறவுவித்தை, மறணவித்தை, பிரிவு, அறிவுமயக்கும் மை, ரசமணி, கருங்கோழி வித்தை, ஆகிய தலைப்புகள் உள்ளன.

* * *

வரிசை எண் : 2845 சுவடி எண் : 1199-c

## திருமூல சுவாமிகள் தண்டகம்

ஏடுகள் : 13 கி. எண்ணிக்கை : 700 அளவு : 25 × 4 செ.மீ.
பக்கத்திற்கு : 9-10 வரிகள் ஆசிரியர் : திருமூலர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை ; முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி : ஓம்

பூகமள் கயிலை மேவும் பூரண மானதொன்றே
ஆகம வேத ஞான சுருதி ............
ஏகவா பரணம் பூண்ட நந்தித் தண்டக்கம் ஓத
வேதமா மகத்த நந்தி...... ....ற்பபதாமே! — 1

முடிவு :

ஆம...... .......... ........ சூட்சாதி சூட்சங்கண்டு
ஓமப்பா போற்றி வால மூலங்கண்டு
ஒருமாவில் மாத்திரைப்போ தூணி......... டையது
.......... ...க்கத்தோடே தானொருவ
நவகோடி சித்துமாட
நாமப்பா நந்திகுரு வானமூலம் நாம்கண்ட
............ .......... .......... ....... — 102

ஹரி : ஓம். குருமுன்னிற்கவும்

தர்மரங்கோட்டை கிடே... .. .........
ஈசான கோவில் கற்ணம் அ. வயித்தியலிங்......
சுருதி பார்வையிட்டு யெழுதினது
மஞ்சவயல் பொதியப்ப சேட்டி.........

காலம் :

இல்லை

குறிப்பு :

இது' எமது சுவடி எண் 38-b/D-66 போன்ற தெனினும் பாட வேறுபாடுகள் காணக்கிடைக்கின்றன. இதில் மூலமந்திரம் என்ற ஒரு தலைப்பு மட்டும் காணப் படுகின்றது.

★ ★ ★

வரிசை எண் : 2846 சுவடி எண் : 1499-d

## வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 4(8-11) கி. எண்ணிக்கை : 75 அளவு : 25×4 செ மீ.
பக்கத்திற்கு : 5 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

குக்குலத்துக்கு

நாசிவழி வருண வாசியை மூட்டி நடுவணையின்
பாசமறவு மிருவினை தீருமுப்பாழ் கடந்த
பேசாதெழுத்தில் உ....ன்திருப் பாதமும் பேணியருள்
வாசிவ காமிதிரு புரைவாலை மனோன்மணியே ! — 15

அமுற்தவல்லி துணையாகவும்

(இதன்பின் சக்கரம் எழுதப்பட்டுளது)

முடிவு :

பிசாசு பிடிக்கு

ஆக்கிப் படைற்று வெரிக்கார் மதுவுண்ட மாடுமுதல்
போக்கிய சாவல்பெலி கொடுத் தேவல் புரிந்தவரை
நாக்கு குளற விழிதான் பிதுங்க நன்றா யடித்து என்
வாக்குக் குள்ளாடி வருவாலை தேவி மனோன்மணியே !

அரிஓம்: வடுகநாதர்க்குத் தாக்கு உச்சாடாய நம
புவனேஸ்பரி துணை

(இதன்பின் ஒரு பெரிய சக்கரம் இருக்கிறது)

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இது, 'மனோன்மணி மாலை, போலும். தலைப்பு இல்லாததால் அறியப்படவில்லை.

இதில், கக்குவத்துக்கு, மண்டையிடிபிடிக்கு, கண்வலிக்கி, விஷத்துக்கு எதிராளிக்கி பார்வை, காது குத்துக்கு, சுளுக்குக்கு, பிசாசு பிடிக்கு ஆகிய தலைப்புகள் உள்ளன.

ஒவ்வொரு ஏட்டின் இறுதியிலும் அதற்குரிய சக்கரம் இருக்கிறது

★ ★ ★ ★

வரிசை எண் . 2847 சுவடி எண் : 1500-a

## சூலை சாஸ்த்திரம்

ஏடுகள் : 7 கி. எண்ணிக்கை : 500 அளவு : 44×3 செ.மீ
பக்கத்திற்கு : 7-8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

**ஹரிஓம் நன்றாக**

**சூலை சாத்திரம்**

ஆதியான வகுத்து நால்வர்க்
கருளிச்செய் யாயுள் வேதத்
தோதிய சூலையீ ரொன்பா
னுறுபெயர் குணங்கள்
தீதறு சாத்தி ய(ங்)கள்
அசாத்திய(ங்)களு செய்மருந்து
கோதையே யிவைக ளெல்லாங்
குறித்துநீ யாய்ந்து கொள்ளே — 1

**முடிவு :**

சொல்லுங்கா துச்சுறெதன்ற தொன்றும்
பலபண்ணெழுங் கொழுங் காய்ப்

புல்லும் புரையும தெதனையும்
பொருந்துங் சுன்னாவான்மெனச்
சொல்லுஞ் செவியிற் காத்தலும் உள்
செருமியி சங்கம்பளம் போல
வல்லல் வருத்துங் குணங்கறனன
போடக மென்னரை வீரே ! — 9

முற்றும் விருத்தம் — 9

காலம் :

இல்லை

குறிப்பு :

இது, எமது சுவ எண் 323-d / D 625 போன்ற தெனினும் முழுமையில்லை,

இதில், சாதிச்சூலை யொன்பதுக்குப்பேர், அசாத்திக மொன்பதுக்கும் பெயர், சாதிச்சூலை யொன்பதில் சூர சூலையின் குணம், அத்திசூலையின் குணம்,சுரசூலைக்கு செங்காதாரி எண்ணை, நாக்கிலே தடவ எண்ணெய். முழுகுகதனாதாளி யெண்ணெய், சுரசூலைக்கு யெட்டிநெய். சுரம் 64-க்கும், பாதரோக நிதானம், கற்ணரோக நிதானம் ஆகியவை உள்ளன.

ஏடுகள் வெவ்வேறு கையெழுத்துக்களுடன் உள்ளன. தொடர்ச்சியாக இல்லை.



வரிசை எண் : 2848 சுவடி எண் : 1500-b

## கபாலரோகம்

ஏடுகள் : 4 கி. எண்ணிக்கை : 200 அளவு : 43 × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 5-6 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

கபோல ரோகம்
அதற்குப் பேர்

கன்னவோசி கன்னவிருத்தி. கன்னப்புற்று
கன்னசூலை கன்னகிந்தி கன்னப்படுவன்
கன்னக் கரைப்பன், கன்னவாதம் ஆக — 8

இதின் குணம் :-

கதுப்பினில் நடுவே துட்டுக் காசுபோற் கனத்து வீங்கி
மிதப்படப் பழுத்துடைந்து விண்டதில் நீர் சீயோடிப்
பதப்படு பருவந்தன்னில் பண்டாறெ தட்டிராவி
விதப்பட வரியதாகும் மிவை கன்ன வொசியே ! — 1

முடிவு :

வாகட வடநூல்யோக மற்றுள்ள தத்து வங்கள்
ஆயிமோ ராதாரம் அதினுள்ள படிமாறி
சொங்களான மண்மிசை வளமை மார்க்கம்
ஈதுடன் பொருக ளெல்லா மீய்ந்தன வயித்தியோர்க்கே ! — 9

காலம் :

இல்லை

குறிப்பு :

இது தனித்தலைப்பா, தொடர்தலைப்பா என்பது அறியக்கூடவில்லை. இருவர் கையெழுத்து ஏடுகள் கலந்துள்ளன, உரைநடையும் செய்யுளும் கலந்துள்ளன.

* * *

வரிசை எண் : 2849 சுவடி எண் : 1500-c

## சூலை நிதானம்

ஏடுகள் : 17 கி. எண்ணிக்கை : 1000 அளவு : 43×3 செ.மீ.
பக்கத்திற்கு : 6-8 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் ; மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் ;

வித்தக மான சைவசம யத்தை விடுத்து வெய்யப்
புத்தாற்குச் சமையம் புக்கும் போதனை யாளவேண்டிப்
பித்தனு மண்ணாளெவுளு சூலையின் பெருமை தன்னை
யித்தலந் தன்னிற் கும்பக் குறுமுனி யியம்பினரரே ! — 1

முடிவு :

சொல்லு மத்தி சுரதாபனாக்கு ளந்த் யெரிவுடிற் மேகம்
வல்ல பித்தஞ் செங்கமாரி வளரு மிரத்த பித்தமுடன்
கொல்லு முதிர மாரியுடன் கொடிய மூத்திரக் கிரிச்சனமு
மெள்ளத் தீருமுன்னாரிக்கி வெறுங்காந்தல் தோன்றாதே ! — 47

நலம் :

இல்லை

குறிப்பு :

இதில், மாந்த சூரணம், வாத சூலையின் குணம், வாதாத்த சூலையின் குணம், வாதநீர்ச் சூலையின் குணம், வாதவாயுச் சூலையின் குணம், இவைக்கு குடி மருந்து, இதர சூரணம், வாத சூலை சுரோணித சூலைக்கு வங்க புகை, இவைக்கு புகை, இவைக்கு பதங்கப்பட்டை, கொம்புவிட முழுக யெண்ணெய், பித்த சூலையின் குணம், மூலணண்டு சூலைக்குணம், விஷபித்த சூலைக்குணம், மூசிகா விஷ சிகிச்சை, எலிவிஷத் துக்கு நெய், பித்தம் நாற்பதுக்கு குணமும், மருந்தும், பித்தத்துக்கு குடிநீர், வரட்சி பத்தத்துக்கு குடிநீர், கபால பித்தம் யிதுக்கு வாலை, பித்தம் மூலையிலுறைந்த குணம், இதற்கு மருந்து, வாய்வு பித்தம் யிதுக்கு தாம்பு, சிலேற்பன பித்த குணம், சிலேற்பன பித்தம் யிதற்கு மருந்து, சிரசுபித்தம் யிதுக்கு மருந்து, செவிப்பித்தம், அத்தியிலுத்த பித்தம், அத்தியில் ரெத்தபித்தத்துக்கு மருந்து, தொந்தபித்தம் யிதுக்கு மருந்து, பித்தம் கோவித்தாற் குணம், மருந்து, அக்கினி மாந்த பித்தமருந்து, மூல பித்தம் யிதுக்குமருந்து, குளிர்த்தி பித்தம் மருந்து, அக்கினிமாந்த பித்தம் யிதுக்கு மருந்து, மூத்திர, பித்தம் யிதுக்குமருந்து பூசணிகடுகு ஆகிய தலைப்புகள் உள்ளன.

★ ★ ★ ★

வரிசை எண் : 2850 சுவடி எண் : 1500-d

## நோயின் லட்சணம்

ஏடுகள் : 24 கி. எண்ணிக்கை : 800 அளவு : 43×3 செ.மீ.
பக்கத்திற்கு : 6-7 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் ;

நேத்திரக் குறி

மேல்விழி சுருங்கிக் காணில்
விரிந்து கண் ணகன்று காணில்

தோலென்ன விமைதளச்சி தோன்றிடில்
வருஷந் தன்னில்
மாலினால்-யால வல வாயுவாற்
பித்தந் தன்னாற்
காலன் கைப்படுவாரென்றே
கழறினார் வேத நூலோர் — 1

முடிவு :

தீதுநீ ரழிவுகொண்டு
செகத்தினில் சாக வேண்டா
மாதரை நினைத்தல் காண்டல்
மருவுதல் மறந்து வேத
னீதியி நடந்து முன்னோர்
னியமித்த மருந்தி
யோதிய குருவை யன்னம்
பத்தியத்துட னுண்ணீரே !

காலம் :

இல்லை

குறிப்பு :

இது, இரண்டு பகுதியாக உளது. கையெழுக்கள் வெவ்வேறு காணப்படுகின்றன.

இதில், பிரமேக நிதானம், லிங்க சூலைக் குணம், நீரளிவு நிதானம், வாதம் பற்றி வரும் நீர் நாலுக்கு, பெருமகணமும், தீராத நீர்க் குணம், பிளவை பத்துக்கும் பேருங் குணமும், ஆனைப் பிளவை, நடுவரிப் பிளவை, யிருவகைப் பிளவை, மிடப் பிளவை, பக்கப் பிளவை, ஆணி பிளவை, சனப் பிளவை, விஷப் பிளவை, உள் மருந்து, பூச மருந்து, பிளவைக்குக் காரம், மேக நிதானம், சூரணம், குடிநீர், மேல்ப்பொடி, நீரழிவு, வுண்டை, நீரளிவுக்குச் சஞ்சீவி யுண்டை, நெருஞ்சிச் சூரணம், வங்க வுண்டை, சூரணம்' நீரளிவில் பத்தியம் ஆகிய தலைப்புகள் உள்ளன.

★ ★ ★ ★

வரிசை எண் : 2851 சுவடி எண் : 1501-a

## இராமதேவர் வைத்தியம் — 81

ஏடுகள் : 18 கி. எண்ணிக்கை : 800 அளவு : 34×3 செ.மீ.
பக்கத்திற்கு : 6·8 வரிகள் ஆசிரியர் : இராமதேவர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம்

ஆதியிலே அமைத்தவிதி எழுத்தைக் காண
அருளான நந்திபதம் அன்பாய்க் கொண்டு
சோதியென நின்றிலங்கும் னாத ரூபி
சுருதியுள்ள வாலைமனோன் மணியைப் போற்றி

முடிவு :

வணக்கமுள்ள இந்நூலை வெளியி டாதே
வஞ்சருடன் பேசாதே வாதா டாதே
யிணக்கமில்லா மாந்தருடன் யிணங்க வேண்டாம்
யின்பமுள்ள வயித்தியனூல் ஈய வேண்டாம்
மணக்குமவர் மதிதனிலே மனத்தை வைத்து
வயித்தியனூல் எண்பதுவும் வகையாய்ப் பார்த்து
தனக்குமிது பொருளென்றே வணங்கிப் போற்றி
சதாகாலங் குருபதத்தில் சார்வாய் முற்றே ! — 83

குருவே துணை; குமரகுருபரன் துணை

மீனாட்சி துணை

இராமதேவர் எண்பதும் முற்றும்

ஸ்ரீராமஜெயம் துணை

காலம் :

இல்லை

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 450-e/D. 997 போன்றது.

இதில், பாசாணக்கட்டு, பூரண லேகியம் ஆகியவை உள்ளன. தலைப்புப் பகுதியில் ஏடுகள் ஒடிந்துள்ளன.

* * *

வரிசை எண் : 2852 சுவடி எண் . 1501-b

## இராமதேவர் பட்சணி — 100

ஏடு 1 கி. எண்ணிக்கை : 30 அளவு : 34 × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 6-7 வரிகள் ஆசிரியர் : இராமதேவர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஆதியந்தம் நடுவிருந்த சோதி காப்பு
அகண்டபரி பூரணமாம் அறிவே காப்பு

முடிவு :

வசியமா மிரவிமின்னாள் வடவேர் வாங்கி
மைந்தனே கவுதும்பை வேரும் வாங்க ! — 4

வேரிரண்டும் பச்சைப்பட் டதனில் வைத்து...
............ ............ ......... ...........

காலம் :

இல்லை

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 600/D-1218 போன்றது.



வரிசை எண் : 2853 சுவடி எண் : 1501-c

## இராமதேவர் கருக்கிடை சூத்திரம் — 500

ஏடுகள் : 87 கி. எண்ணிக்கை : 3500 அளவு : 34 × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 6—8 வரிகள் ஆசிரியர் : இராமதேவர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

………தே கரியில் வைத்து உருக்க ஆடுங்
காடாத கருவென்ன சாறணையைச் செய்யில்
கலந்தோடி அண்டத்தில் புக்க லாமே ! — 23

முடிவு :

மெய்யான குருபதத்தைப் பணிந்து போற்றி
விளம்பினேன் கருக்கிடைகூத் திரந்தான் முற்றே ! — 522

ஸ்ரீராம தேவர்………சூஷ்த்திரம் அன்னூத்துச்

சிலுவானம் யெழுதி நிறைவேறினது.

முற்றும்

குருபாதந் துணை

காலம் :

இல்லை

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 661-a / D-1284 போன்றது. ஏடுகள் தலை தடுமாற்றம்; ஒடிந்தும் மடிந்தும் உள்ளன. பிற ஏடுகள் கலந்துள்ளன.

* * *

வரிசை எண் : 2854 சுவடி எண் : 1501-d

## மச்சமுனியார் திருமந்திரம் — 800

ஏடுகள் : 85 கி. எண்ணிக்கை : 5000 அளவு : 34×3 செ.மீ.
பக்கத்திற்கு : 6-8 வரிகள் ஆசிரியர் : மச்சமுனியார் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

………… ……… மதிநிறை கண்செவி
தேயுடன் பரிசந் தெய்வநிலையிது

தோய்வறக் கண்டுத் துல ிய ஐம்புலன்
சேயுடனு சிவமதில்ச் சென்றிட முத்தியே! — 10

முடிவு :

துலங்குமெண் ணூறுசுட ரொளி கண்டவன்
களங்கம் கண்டு கற்பூர தீபம் போல
விளங்கிய யோகம் விரும்பி மனது
யிலங்கிய வாசியே காந்த முற்றுமே! — 802

மச்சமுனி நாயனார் திருமந்திரம்

எண்ணூறு முற்றும்

காலம் :

தாது வருஷம் வையாசி மாதம் பதிமூணாந் தேதி அசுபதி
நட்சேத்திரமும் துவாதேசியும் ிஷப லெக்கினமும்
சுக்கிரவாரமுங் கூடின சுபதினத்தில் மச்சமுனியார்
திருமந்திரம் எண்ணூறும் எழுதி நிறைந்தது.

முற்றும்

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 639 / D-1262 மச்சமுனியார் சரக்கு வைப்பு 800 போன்றது. ஏடுகள் தலை தடுமாற்றம். பிற ஏடுகள் கலந்துள்ளன.

* * *

வரிசை எண் : 2855 சுவடி எண் : 1501-c

## இராமதேவர் — 500

ஏடுகள் : 4 கி. எண்ணிக்கை : 200 அளவு : 34×3 செ.மீ.
பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : இராமதேவர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஆதியந்த மெய்நிறைந்த சோதி பாதம்
அகண்டபரி பூரணத்தின் அறிவில் கூடி

பாதியாய் முப்பொருளு மூன்று மொன்றாய்
பரவெளியாய் நின்றபரா பரையின் பாதம்

முடிவு :

போட்டவுடன் கல்லுப்போ லிறுகி நிற்கு
புகழான கருமத்தங் காய்க்குள் வைத்து
நாட்டமுடன் முன்போலே (பத்து)விசை போடு
நலமாகக் கழுவியதை யெடுத்துக் கொண்டு
மூட்டென்ன கரண்டியிலே. எண்ணெய் குத்தி
யுருக்கிமுசி பா........... ......... ........... — 23

காலம் :

இல்லை

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 661-a / D-1284 போன்றது.

பின்னர் 3 உதிரி ஏடுகள் உள்ளன.



வரிசை எண் : 2856 சுவடி எண் : 1502

## வைத்திய சதகம்

ஏடுகள் : 20 கி. எண்ணிக்கை : 500 அளவு : 20×4 செ மீ
பக்கத்திற்கு : 9-10 வரிகள் ஆசிரியர் : அகந்தியர் ? பொருள் : மருத்துவம்
நிலைமை : நல்ல நிலை (சிறிதுபழுது) முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

அருவுருவா யருபமுமா யடங்காத
பொருளுமாகி யடங்கலாக
மருவுருவா யண்டபகி ரண்டத்து
மப்புறத்து மாகிநின்ற
ஒருவுருவா யருபமுமாய் உயிரில்நிறைந்
தியங்கி நிற்கு மொப்பிலானை
கருவுருவாய் வயித்தியத்தின் சதகமதை
வாழ்த்தவுநீ காப்புத் தானே !

நூல்

காப்பான சிவமுடனே சத்தி கூட
கெருவான வாயுவங்கி சுனைஎ முப்பி
காப்பான அறல்கூடி விளைந்து பொங்கி
சம்போக வேளையிலே சாடும் விந்து
கோப்பாக அறுகுநுனி துளிபோல் வீழ்ந்து
நிறைந்தோங்கி உசுரனங்கிக் காவலாக
காப்பான திசமாத வரையில் நின்று
குவலையத்தில் வீழ்ந்தாப் போலவீழுந் தானே ! — 1

முடிவு :

வுண்டான யிந்நூலை யுணர்ந்த பேற்கு
முயந்தோர்கள் நலங்கியவை மிகவே சேரு
கொண்டாடும் வித்தைமதி புத்தி யுண்டாங்
குவலயத்தோர் புகழ்பெருகி யோக முண்டாம்
வண்டாடும் பூமாது நிரைவாழ் வுண்டாம்
கேள்ப்பாக்கி யஞ்சேரு மென்று தானே
பண்டோர்கள் விதிமுறை யாய்ந்து சொன்ன
பாங்கான சதகமது முத்துத் தானே ! — 102

வயித்திய சதகம் முற்றும்

குருபாதமே கெதி

காலம் :

இல்

குறிப்பு :

இது, மிக நல்ல நூலாகத் தெரிகிறது. எழுத்துக்கள் நன்றாக, அழகாக உள்ளன, அரிய நூலாகவும் காணப்படுகிறது



வரிசை எண் : 2857 சுவடி எண் : 1503-அ

## அகத்தியர் வைத்தியம் — 200

ஏடுகள் : 37 கி. எண்ணிக்கை : 2000 அளவு : $32\frac{1}{2} \times 3$ செ.மீ.
பக்கத்திற்கு : 8-10 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஆதியே மணக்கோலமஞ் செய்யு நாளில்
ஆதிமூல தேவரிழி கூட்ட மாச்சு
வேதிய்யோ ............னும் காணா தென்று
விமலன்னார் விசுவனுக்கு வார்த்தை யீந்தார்

முடிவு :

யிந்தாலே யிரவியைத்தான்ங் கட்ட வேணும்
எடுத்ததொரு அண்டத்தி லேற வேணும்
\+ \+ \+ \+ \+ \+
கொந்தான பூரணம்மே சாற மாகு ..
கூட்டுகின்ற ரவிகோடா கோடி முத்றே ! — 202

காலம் :

கறாய(கர)வருமும் அற்பிசை மாசம் 27-தேதி சனிக்கிழம்மை பத்து நாழி(க்குள்) தெசட்ணாமூர்த்தி வகார சூத்திரம் 202 எழுதி முகிந்தது முத்தும்,

பீறு சாயப்பூ கையி யெழுத்து ஆண்டவண்ந்துணை. நவன்னாதிப் பரினென்னும் பெற பாதம் ஊதவியறுளுலோ வேணும்.

சறசோதி லெஷ்சிக்க வேணும்
ஆயி மனோன்மணி பாதமலற் துணை

குறிப்பு :

இது எமது சுவடி எண் 289-ε/D. 515 அகத்தியர் வகாரத்திரயம் சூத்திரம் இரு நூறு போன்றது, பெரும்பாலும் அகத்தியர், தெட்சணாமூர்த்தி இருவரும் ஒருவராகவே மருத்துவச் சுவடிகளில் காணப்படுகிறது.

இதில், வழலைக்கு விபரம், திராவகம், பாஷாணம், குருமெழுகு, குருபற்பம், பூவழலை, சுண்ணம், செயநீர், உபசறம்பெறவிபரம், சாறணை, சுண்ணக்குகை, சுன்னத் திராகவம், னாகக்கட்டு, நவச்சாரக்கட்டு, ஏகாந்தத் தயிலம், கல்ப்பம் கெந்தக மெழுகு பொன்னு அடிவழலை, பூரணம், நாதவித்து, வல்லாரை கற்பம் முதலான பல தலைப் புகள் காணப்படுகின்றன.

* * *

வரிசை எண் : 2858 சுவடி எண் : 1503-b

## போதேரிஷி பாடல் சூத்திரம் — 100

ஏடுகள் : 20 கி. எண்ணிக்கை : 1500 அளவு : 32½ × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 8-10 வரிகள் ஆசிரியர் : போதேரிஷி பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

சீறருலகும் பொதிகைமுனி பாதம் போத்தி
சிவகாமீத் தாயற்தன்ம் பாதம் போத்தி
யேவ்வுலகும் நந்திசிவன்ம் பாதம் போத்தி
இம்பழுத்த சித்தற்ருடோ பாதம் போத்தி

**முடிவு**

ஊனென்ற காயத்தை சுத்தி செய்ய
உண்மைசொல்லி யிருக்குதெண்டுக் குடுக்க மாட்டார்
தானென்று தெண்டனிட்டா லிரங்கி யீய்வார்
சறனூலால் சொன்ன சாயுட்சிய முற்றே ! — 102

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இது எமது சுவடி எண் 862-f/D, 1802 போன்றது.

இதில், பூநீர் பிறப்பு, வழலையுப்பு, சுன்னம் விபரம், வெடியுப்புச் செயநீர், சிவநீரு செயநீரு. துருசுக்கட்டு, காரக்கட்டு, துருசுச்சுன்னம், கவனுப்பம் விபறம், சித்தன் என்ற பேர் வந்த விபரம், லேபனம், வித்தை, வினோதம் முதலான பல தலைப்புகள் உள்ளன.



வரிசை எண் : 2859 சுவடி எண் : 1503-c

## தெட்சிணாமூர்த்தி அருளிச் செய்த சூத்திரம்—சுருக்கம் அறுபது

ஏடுகள் : 12 கி. எண்ணிக்கை : 800 அளவு : 32½ × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 8-9 வரிகள் ஆசிரியர் : தெட்சிணாமூர்த்தி பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

